## V.—BUDGET FOR THE YEAR 1958-59. VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958-59.

### DEMAND XXXIII-LABOUR INCLUDING FACTORIES.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 34,01,900 under Demand XXIII—Labour including Factories."

I have printed a statement and circulated it to Members. I reserve my comments.

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 34,01,900 under Demand XXIII—Labour including Factories."

I understand that the Opposition parties are agreed that Mr. Pakkirisami Pillai will move his cut motion. He wil move it.

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move—

" That the allotment of Rs. 34,01,900 under Demand XXIII—Labour including Factories be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut motion moved—

" That the allotment of Rs. 34,01,900 under Demand XXIII—Labour including Factories be reduced by Rs. 100."

SRI S. PAKKIRISAMI PILLAI : கனம் தலைவர் அவர்களே, லேபர் இங்க்ளூடிங் பாக்டரீஸ் என்ற மான்யத்தின் கீழ் இந்த வெட்டுப் பிரேரணையை பிரேரேபிக்கும்போது நான் சில வார்த்தைகளைச் சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன். அத்துடன் சில முக்கியமான விஷயங்களையும் எடுத்துச் சொல்லவேண்டிய கடமையும் எனக்கு இருக்கிறது. காங்கிரஸ் கட்சி நாட்டின் சுதந்திரத்தை அடையப்பெற்று அந்த ஆ முதலாளிகளின் அனுசரணையின் கீழ் கொண்டு வந்து இப்போது இருக்கும் படியான நிலைமையில் தொழிலாளர்களுக்கு உண்டான கடமையைச் செய்ய தவறி இருக்கிறார்கள். எந்த வழியிலேயும் தொழிலாளர்கள் முன்னேற்றமடைந்தார்கள் என்று தைர்யமாக இப்பொழுது இருக்கும்படியான ஆட்சியாளர்கள் சொல்ல முடியாது. இப்பொழுதுள்ள ஆட்சியாளர்களுக்கு தொழிலாளர்களின் பேரில் ஆர்வம் இருக்கலாம், தொழிலாளர்கள் முன்னேற்றமடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கலாம் அதற்காக வேண்டிய பிரசாரம் செய்யலாம். அதற்கான ஆசை வார்த்தைகளைச் சொல்லலாம். ஆனால் தொழிலாளர்களுடைய அன்றாட வாழ்க்கையைப் பார்த்தால் எந்தத் தொழிலாளர்களும் முன்னேற்றமடைந்ததாகக் காணோம் இந்த பத்து வருஷ காலத்தில். பல்வேறு பிரசாரத்தின் மூலமாக காங்கிரஸ் கட்சியினுடைய நிலைமையை எடுத்துச்சொல்லிக்கொண்டு வருகிறார்களே தவிர தொழிலாளர்களுக்கு இன்னது செய்தோம், இந்தச் சட்டத்தை இயற்றினோம் இந்தந்த புதியதான சலுகைகளை வாங்கிக் கொடுத்தோம் என்று சொல்லும்படியான அளவில் கிடையாது. இதை யாரும் மறுக்க முடியாது. மறுப்பதற்கும் தைர்யம் இருக்காது. இருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

உதாரணமாக இது முதலாளித்துவ அரசாங்கமாக இருக்கிறது என்று சொல்லும் அளவில் நான் சில விஷயங்களை எடுத்துக்காட்ட முடியும். இந்த ஆட்சியை ஒரு கஞ்சத்தனமான முதலாளித்துவ ஆட்சி என்று சொல்ல முடியும்.

MR. SPEAKER : சத்தம் அதிகமாக இருக்கிறது. கனம் அங்கத்தினர் பேசுவது சபாநாயகருக்கு கேட்கவில்லை. ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை பேச்சை கேட்கலாம் என்று நினைக்கிறேன்.

9-30 a.m. SRI S. PAKKIRISAMI PILLAI: அரசாங்க அலுவலகங்களில் எல்லா டிபார்டுமெண்டுகளிலும் சிப்பந்திகள் "பாட்ஜை" அணிந்துக்கொண்டு அவர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் போதாது என்று எடுத்துக்காட்டுவதை எல்லோரும் பார்த்திருக்கிறார்கள். இதை நான் புதியதாக சொல்லுவதாக யாரும் எடுக்க முடியாது. இதை எல்லோரும் ஒப்புக்கொள்ளத் தான் செய்கிறார்கள். அவர்களுக்கு போதுமான வாழ்க்கைத்தர சம்பளம் கொடுக்கப்படவில்லை. கொடுக்க முடியாத நிலைமையை இப்பொழுது வெளியிலே சொல்லுவதற்கு பயப்படுகிறார்கள் ஆட்சியாளர்கள். ஏதோ எலக்ஷன் காலத்திற்கு முன்னால் ரூ. 5 கொடுத்திருக்கலாம்.

THE HON. SRI R. VENKATARAMAN: Mr. Speaker, Sir, the question of allowances and emoluments of Government servants is not pertinent to the Demand under discussion. This relates to Factory and Labour employed in private enterprise.

MR. SPEAKER: I think the Hon. Minister is right. Let the hon. Member please confine his remarks to Labour.

SRI S. PAKKIRISAMI PILLAI: தொழிலாளர்கள் கொள்கையைப் பற்றி இந்த மான்யத்தில் பேசுகிறேன். அரசாங்கத் தொழிலாளர்கள் பாக்டரி தொழிலாளர்கள் என்று வரையறுத்துச் சொல்ல முடியாது.

MR. SPEAKER: I will not allow the hon. Member to speak like that. I have already ruled that the discussion should relate to Labour and not to Government employees. If the hon. Member persists in referring to Government employees, then I will have to take action.

SRI S. PAKKIRISAMI PILLAI: I bow to your ruling.

தங்களுடைய சிப்பந்திகளுக்கு இம்மாதிரி சம்பளம் கொடுக்கும் மனப்பான்மை ஆட்சியாளர் மத்தியில் இருக்குமானால், பல தொழிலாளர்களுடைய நிலைமையை அவர்கள் எங்கே கண்காணிக்க முற்படப்போகிறார்கள்? நான் மற்ற தொழிலாளர்களுடைய முன்னேற்றத்திற்காக, அவர்களுக்கு அதிகச் சம்பளம் வாங்கிக் கொடுக்க முயற்ச்சி எடுத்துக்கொண்டிருக்கும் பொழுது, இதர முதலாளிகள் "அரசாங்கத் தொழிலாளர்களை போய் பாருங்கள். அரசாங்கம் அவர்களுடைய சிப்பந்திகளுக்கு என்ன சம்பளம் கொடுக்கிறார்கள்? அதைப்பற்றி கேட்பதற்கு உங்களுக்கு வாய் கிடையாது. இங்கு வந்து ஏமாற்ற வந்துவிட்டீர்கள் என்று கேட்கும்படியான தைரியம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதே மாதிரி, அரசாங்க ஊழியர்களுக்கு எவ்வளவு சம்பளம் அதிகமாகக் கொடுக்கிறார்களோ, அவ்வளவு அதிகமாக கொடுக்கிறோம் என்று கார்ப்பரேஷன் அல்லது மற்ற முனிசிபல் ஊழியர்களின் ஊதியத்தைப் பற்றி அவர்கள் பேசும் அளவில் இருந்துகொண்டிருக்கிறது.

நாம் இப்போது பார்க்கிறோம். மதராஸ் எலக்ட்ரிஸிடி தொழிலாளர்களுக்கு 8 அணா சம்பளம் கொடுத்து அவர்களிடமிருந்து உடலை பிழிந்து வேலை வாங்குகிறார்கள். காண்ட்ராக்ட் மூலமாகவோ ஏஜன்ஸி மூலமாகவோ அல்லது வேறு வழியாகவோ செய்யப்படலாம். அவனுடைய உழைப்பைப் பெற்று அவனிடமிருந்து வேலை வாங்கி அதனால் கிடைக்கும் தொகையை யார் அனுபவிப்பது? ஏன் அவர்களை கஷ்டப்படும் நிலையில் வைத்துக் கொண்டிருக்கவேண்டும்? அவர்களால் கஷ்டப்பட்டு சம்பாதிக்கப்படும் தொகையை அவர்கள் அனுபவிக்க வேண்டாமா? இந்த சமயத்தில் இந்த தத்துவத்தை கேட்க ஆசைப்படுகிறேன். சாதாரணமாக "ஷிப்பிங் ஏஜண்டுகள்" கூட இம்மாதிரி தொழிலாளர்களை சுரண்டி வாழ்கிறார்கள். அவர்கள் உல்லாச வாழ்க்கையில் ஈடுபடும்படியான அளவுக்கு பணத்தை சம்பாதிக்கிறார்கள். அவர்கள்கூட 12 அணா கூலி கொடுக்

கிருர்கள். தொழிலாளிகளுக்கு சாப்பாடும் போடுகிருர்கள். அந்த அளவுக்குகூட இல்லாமல் எலக்ட்ரிஸிடி தொழிலாளர்களை சுரண்டும் நிலைமையில் அரசாங்கம் இருக்கிறது. இது எதை எடுத்துக்காட்டுகிறது என்றுல், கஞ்சத்தனத்தைத் தான் எடுத்துக்காட்டுகிறது என்று நான் சொல்லவேண்டும்.

இங்கிலாந்தில் அரசாங்க சிப்பந்திகளுக்கு மற்ற எந்தத் தொழிலாளி களுக்கும் கொடுக்கப்படும் அளவுக்கு மேல் தான் ஊதியம் அளிக்கப்படு கிறது என்று நான் கேள்விப்படுகிறேன். அதனுல் அந்த சிப்பந்திகளின் மத்தியிலே திறமையும் நேர்மையும் இருந்துகொண்டு வருகிறது. அத னுல் அவர்கள் வேறு யாரிடமிருந்தும் எந்த உதவியும் எதிர்பார்ப்பது கிடையாது. அந்த மாதிரி நிலையிலே நம்முடைய சிப்பந்திகளை அரசாங்கம் வைத்துக்கொண்டால் வேறு யாரும் அவர்களைப்பற்றி சின்ன வார்த்தைகள் சொல்லமுடியாது. அவ்வாறு செய்தால் அவர்கள் நேர்மையாகவும் திற மையாகவும் நடந்துகொள்ளுவார்கள். அம்மாதிரி நிலைமையை ஏற்படுத்து வதற்கு இன்னும் எத்தனை காலம் ஆகும்? அன்றைக்கு ஒரு நாள் கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசிக்கொண்டிருந்த பொழுது, ஜெர்மனி யில் ஒரு தொழிலாளி வேலை செய்தால் அவனுக்கு மேற்பார்வையாளர் கிடையாது. ஆனுல் அவர்கள் செய்யும்படியான வேலை வெகு நுணுக்க மாகவும், திறமையாகவும், செம்மையாகவும் இருந்துகொண்டிருக்கிறது என்று எடுத்துச்சொன்னுர்கள். அது உண்மையாக இருக்கலாம். ஆனுல் அவர்களுக்கு கொடுக்கும்படியான சம்பளம் எவ்வளவு? அவர்கள் மேற் பார்வையாளர்களுக்கு கொடுக்கும்படியான சம்பளம் எவ்வளவு? இரண்டு பேர்களுக்கும் சம்பள விகிதாசார வித்தியாசம் எவ்வளவு? அவர்களுக்கு வாழ்க்கைத் தரத்திற்கு மேலே இருக்கும்படியான நிலையிலே அவர்களுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது. அவர்கள் கஷ்டப்பட்டு வேலை செய்யும்படி யான அளவுக்கு தங்களை காப்பாற்றிக்கொள்ள முடியும். அந்த நிலையில் அவர்கள் இருக்கிற காரணத்திஞலே அவர்கள் மனதில் உண்மையாகவே தேச பக்தி ஏற்படுகிறது. அந்த தேச பக்தி உண்டாகவேண்டும், நாட்டு மக்களுக்கு சேவை செய்யும் பக்தி உண்டாகவேண்டுமென்று சொன்னுல், தொழிலாளர்களை பட்டினி போட்டால் அந்த பக்தியை யாரும் அவர்களி டையே எதிர்பார்க்க முடியாது. இந்த மாதிரி சம்பளவிகிதத்தை வைத்துக் கொண்டு இந்தக் காலத்திலே நாம் சுதந்திரம் அடைந்திருக்கும்பொழுது நம்முடைய ஊழியர்களிடமிருந்து இம்மாதிரியான பக்தியை எதிர்பார்ப்பது மிகவும் கஷ்டமாகத்தான் இருக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அம்மாதிரியான நிலைமையை தொழிலாளர்களிடையே ஏற்படுத்துவதற்கு, உடனடியாக சம்பள விகிதாசார வித்தியாசத்தை குறுக்கி கொள்ள வேண்டும். இப்பொழுது கீழே இருக்கும்படியான தொழிலாளி ரூ. 20, 22 வாங்குகிருன். மேலே இருக்கும்படியான அதிகாரி ரூ. 5,000 வாங்குகிருர். இந்த சம்பள விகித வித்தியாசத்தை முதலில் குறைக்க வேண்டும். ஒன்றுக்கு பத்து மடங்கு தான் வித்தியாசம் இருக்கவேண்டும். ஒரு தொழிலாளிக்கு தன்னுடைய குடும்பத்தைக் காப்பற்றுவதற்கு இப் பொழுது இருக்கும் வாழ்க்கைப் புள்ளியின் அளவுக்கு குறைந்த பட்சம் ரூ. 150 வேண்டும் என்று பொருளாதாரத் துறையில் வேலை செய்யும்படி யான மேதைகள் கணக்குப்போட்டிருக்கிருர்கள். ஆகையால் உயர்தர அதி காரிக்கு ரூ. 1,600-க்கு மேல் சம்பளம் இருக்கக்கூடாது. அந்த நிலைமைக்கு கொண்டுவரவில்லை என்று சொன்னுல் முதலாளிகளின் அனுசரணையின் கீழே அவர்கள் ஏஜன்டுகளாகத்தான் ஆட்சியாளர்கள் ஆட்சி புரிகிருர்கள் என்று சொல்லவேண்டியிருக்கிறது. சோஷலிஸ மனப்பான்மை, சோஷ லிஸத் தன்மை கொண்டுவரும்படியான நிலையில் அவர்கள் இருக்கமாட்டார் கள் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்த சம்பள விகிதா சார வித்தியாசத்தை குறைப்பது மிகவும் அவசியமாக இருக்கிறது. முக்கி யமாக இதர தொழிலாளர்கள் தாங்களே முயற்சி எடுத்துக்கொண்டு இதற்காக பாடுபடுவதற்கு அரசாங்கத்தார் அனுமதி கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. எல்லா வழிகளினும் தடையாக இருந்து அவர்களுக்கு குந்த கமான வழியிலே எதையெல்லாம் செய்யவேண்டுமோ அதையெல்லாம் செய்வதற்கு அரசாங்க அதிகாரிகள் அத்தனை பேரும் முயற்சி எடுத்து கொண்டிருக்கிருர்கள்.

[Sri S. Pakkirisami Pillai] [25th March 1958

9-40 a.m. முதலாளிகளுக்குச் சாதகமாகத்தான் அதிகாரிகளும் இருக்கிறார்கள். ஏழைத் தொழிலாளர்களை அதிகாரிகள் கவனிப்பதில்லை. "ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்" என்பது போல அதிகாரிகளும் தொழிலாளர்களின்மீது தான் பாய்கிறார்கள். முதலாளிகளுக்கு சாதகமான முறையிலும் தொழிலாளர்களுக்கு பாதகமான முறையிலும்தான் அரசாங்க அதிகாரிகள் நடந்துகொள்கிறார்கள். அந்த அந்தத் தொழிலாளர்கள் அவரவர்களாக கஷ்டப்பட்டு முயற்சித்து தங்களுக்கு நிவாரணம் தேடிக் கொள்ள முயன்றால் அப்போது கோர்ட்டுகளும் அவர்களுக்கு எதிராக தீர்ப்பளிக்கின்றன. முதலாளித்துவ அடிப்படையில் உள்ள சமுதாயத்தில் எல்லாம் தொழிலாளிகளுக்கு பாதகமாகவும் சீர்கேடாகவும் இருக்கின்றன. பத்திரிகை நிருபர்கள் அவர்களுடைய சொந்த முயற்சி செய்து கோர்ட்டுக்குச் சென்று ஒரு தீர்ப்புப் பெற்றார்கள். அந்தத் தீர்ப்பின் பேரில் அப்பீல் செய்யப்பட்டதற்குப் பிறகு அந்தத் தீர்ப்பு நிராகரிப்பட்டிருக்கிறது. அதற்கு மேல், தங்களுக்கு சாதகமான தீர்ப்பை பெறுவதற்கு பத்திரிகை நிருபர்கள் மேலும் முயற்சி செய்யவேண்டியிருக்கிறது. தொழிலாளர்களில் ஒவ்வொரு பிரிவினரும் இப்படிப்பட்ட நிலைமையில்தான் இருக்கிறார்கள். தொழிலாளர்கள் அவர்களுடைய கஷ்டங்களுக்கு நிவாரணம் தேடிக் கொள்வதற்கு முயற்சி செய்யும்போது அரசாங்கத்தார் அவர்களுக்கு எந்த விதத்திலும் ஒத்தாசை அளிப்பதில்லை. அவர்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்கு அரசாங்கம் தானாகவே முன்வருவதில்லை. "அவர்கள் நம்மை அணுகும்போது பார்த்துக்கொள்ளலாம்" என்ற மனோபாவத்தில் தான் அரசாங்கத்தார் இருக்கிறார்கள்.

அரசாங்கத்தார் அவசர அவசரமாக ஆத்திரத்துடன் மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டுவந்தார்கள். அவ்வாறு அவசர உணர்ச்சியுடன் மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டுவந்த அரசாங்கத்தார் ஓட்டல் தொழிலாளர்களுக்கான சட்டத்தைக் கொண்டுவருவதற்கு இன்னும் தயங்குகிறார்கள். பீடித்தொழிலாளர்களுக்கான சட்டத்தைக் கொண்டுவருவதற்கும் தயங்குகிறார்கள். மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டுவரும்போது அரசாங்கத்தார் காட்டிய அவசர உணர்ச்சியை, தொழிலாளர்களுக்கான சட்டங்களைக் கொண்டுவருவதில் ஏன் காட்டக்கூடாது?

**THE HON. SRI R. VENKATARAMAN** : பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி கூட்டத்தில் அதற்கு அவசியமான பிரேரேபணை நீங்களே கொண்டுவந்திருக்கலாமே.

**SRI S. PAKKIRISAMI PILLAI** : ஒரு நாட்டின் பொதுவான முன்னேற்றம் அந்நாட்டிலுள்ள தொழிலாளர்களின் முன்னேற்றத்தைப் பொறுத்து தான் இருக்கிறது. தொழிலாளர்கள் முன்னேறினால்தான் சமுதாயம் முன்னேறும். தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தைப் பார்த்து தான் ஒரு நாட்டின் பொருளாதார நிலைமை மதிப்பிடப்படும். தொழிலாளர்களின் முன்னேற்றத்திற்காக இந்த அரசாங்கத்தார் இதுவரையில் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. இனிமேலாவது அதற்கு அரசாங்கத்தார் முயற்சிக்க வேண்டுமென்று கோரி, இந்த மான்யத்தின்பேரில் இந்த வெட்டுப் பிரேரேபணையை நான் பிரேரேபிக்கிறேன். என் அன்பிற்குரிய கனம் மந்திரி ஸ்ரீ வெங்கடராமன் அவர்கள் கவுன்சிலுக்கு திரும்பவும் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**MR. SPEAKER** : கனம் மந்திரி அவர்கள், தாம் பதிலளிப்பதற்கு எவ்வளவு நேரம் எடுத்துக்கொள்வார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : எனக்கு முக்கால் மணி நேரம் போதும்.

**MR. SPEAKER** : 1½ மணிக்கோ அதற்கு முன்னதாகவோ நான் வோட்டு எடுக்க வேண்டும். கனம் அமைச்சர் பதிலளிப்பதற்கு முக்கால் மணி நேரம் போதும் என்று சொல்கிறார். எதிர்கட்சித் தலைவர்கள் ஸ்ரீ கல்யாணசுந்தரமும், ஸ்ரீ சின்னதுரையும் ஒவ்வொருவரும் 15 நிமிஷங்கள் பேசப்போகிறார்கள். பாக்கியுள்ள நேரத்தில் மற்ற கனம் அங்கத்தினர்கள் பேசலாம்.

25th March 1958]

SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சரின் மான்யக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பத்தாண்டு காலமாக இந்த ராஜ்யத்தில் தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரம் உயரவில்லை என்றும், தொழிலாளர்களுக்கு சர்க்கார் எந்த உதவியும் அளிக்கவில்லை என்றும் கனம் அங்கத்தினர் ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை பேசியதைப் பார்த்து நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன். தொழிலாளர்களுக்கு குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால், தொழிலாளர்களுக்கு அரசாங்கத்தார் எந்த உதவியும் செய்யவில்லை என்று சொல்லி அரசாங்கம் செய்துள்ள உதவிகளை அவர் அடியோடு மறுப்பதைப் பார்த்து நான் மிகவும் ஆச்சரியப்படுகிறேன். தொழிலாளர்களைப் பொறுத்த வரையில், நாடு சுதந்திரமடைந்த பிறகு அவர்கள் எவ்வளவோ முன்னேறியிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்கு எத்தனையோ துறைகளில் சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சர்க்காருடைய முயற்சியாலும் தனிப்பட்ட அமைச்சர்களின் முயற்சியாலும் அவர்களுக்கு எத்தனையோ சலுகைகள் கிடைத்திருக்கின்றன. அவைகளை நாம் மறுப்பது சரியல்ல. தொழிலாளர்களின் பிரச்னை ஒரு தனிப்பட்ட பிரச்னையாக இருக்கிறது. எந்தக் காரணத்தாலோ அவர்களுக்கு கஷ்டங்களுக்கு மேல் கஷ்டங்கள் வந்துகொண்டிருக்கின்றன. அவர்களுடைய பிரச்னை ஒன்றைத் தீர்த்தால் அதற்கு பிறகு அவர்களை பாதிக்கும் இன்னொரு பிரச்னை எழுகிறது. இதற்குக் காரணஸ்தர்களாக இருப்பவர்கள் முதலாளிகள். எந்த சட்டத்தைக் கொண்டுவந்தாலும் அதிலிருந்து தப்பித்துக் கொண்டு தொழிலாளிகளை ஏமாற்றுவதை அவர்கள் நோக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே தொழிலாளர்களின் தொல்லைகள் தீர்க்கப்படாமல் நீடித்துக்கொண்டே வருகின்றன. இதற்காக சர்க்காரைக் குறைச்சொல்ல முடியாது. தொழில் துறையில், ஒரு தொழிலுக்கு பல தொழில் சங்கங்கள் இருப்பதை அனுமதிப்பதை முதலாளிகள் தங்கள் சொந்த நலன்களுக்குப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். அதாவது, அவர்கள் தொழிலாளர்கள் சங்கங்களுக்குப் போட்டியாக தங்கள் சங்கங்களை அமைத்துக் கொள்கிறார்கள். போட்டிச் சங்கங்களால் தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். ஆகையால், இந்தப் பிரச்னையை கனம் அமைச்சர் தீர ஆலோசித்து, ஒரு தொழிலுக்கு ஒரு சங்கத்திற்கு மேல் இருக்கக்கூடாது என்று விதிக்கும் சட்டத்தைக் கொண்டுவந்தால் மிகவும் நன்றாக இருக்கும் அப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டுவந்தால் தான் தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரமும் ஓரளவு உயரும். தொழிலாளர்களின் தலைவர்களையும் வேறு தொழிலாளர்களையும் இழுத்துப்போட்டு போட்டிச் சங்கங்களை முதலாளிகள் அமைத்துவிடுவதால், தொழில் துறையில் பல சண்டை சச்சரவுகள் ஏற்படுகின்றன. ஆகையால் ஒரு தொழிலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சங்கம் இருக்கக்கூடாது என்று விதிக்கும் மசோதாவை இந்த சபைக்கு சீக்கிரம் கொண்டுவரவேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன். முன்னால்தொழில் அமைச்சராகிய கனம் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம்கூட அப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டுவருவது பற்றி சில இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார். தொழிலாளர்களின் தலைவராக இருந்துவந்திருக்கும் கனம் ஸ்ரீ வெங்கடராமன் தொழிலாளர்களுடைய பிரச்னைகளை மிகவும் நன்றாக அறிந்திருக்கிறார். அவர் அந்தச் சட்டத்தை சீக்கிரம் கொண்டுவந்தால் தொழிலாளர்களின் பல பிரச்னைகள் எளிதில் தீர்த்துவிடும். அப்படிப்பட்ட சட்டம் வந்தால் தொழிலாளர்கள் முதலாளிகளின் சூழ்ச்சியிலிருந்து விடுபடுவார்கள். **"Government attach the greatest importance to the prompt and willing implementation of settlements and awards"** என்று **"Labour in Madras State"** என்ற பிரசுரத்தில் சர்க்கார் சொல்லியிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் ஏற்படும் ஒப்பந்தத்தின்படியோ, தொழில் கோர்ட்டுகள் கொடுக்கும் தீர்ப்புகளின் படியோ முதலாளிகள் நடக்கவில்லையென்றால், அந்த முதலாளிகளின் பேரில் மேல்நடவடிக்கை எடுப்பதற்கு சட்டம் இடம்தரவில்லை என்று நினைக்கிறேன். ஆகவே, ஒப்பந்தத்தையோ தொழில் கோர்ட்டின் தீர்ப்பையோ மீறும் முதலாளிகளிடமிருந்து ஏற்கனவே அங்கீகரிக்கப்பட்ட நியாயமான சலுகைகளைப் பெறுவதற்கு, தொழிலாளர்கள் நீதிமன்றத்திற்குப் போக வேண்டியிருக்கிறது. உதாரணமாக ஒரு ஒப்பந்தத்தைப் பற்றிக் கூற விரும்புகிறேன். இந்த ஆண்டு ஜனவரி மாதம் நீலகிரி தோட்டத் தொழிலாளர்

[Sri J. Matha Gowder] [25th March 1958

கள் சம்மந்தமாக, லேபர் கமிஷனர் முன்னிலேயில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. " irrespective of profit or loss " அந்தத் தொழிலாளர்களுக்கு முதலாளிகள் போனஸ் கொடுத்துவிட வேண்டும் என்ற தீர்மானத்திற்கு முதலாளிகள் ஒப்புக்கொண்டார்கள். அந்த ஒப்பந்தம் நடந்த இடத்திற்கு நானும் சென்றிருந்தேன். அந்தத் தீர்மானத்திற்கு எல்லா முதலாளிகளும் ஒப்புக் கொண்டார்கள். ஆனல் ஒப்பந்தத்திற்குப் பிறகு சில முதலாளிகள் ஒப்பந்தப்படி நடக்கவில்லே. காரணம் கேட்டால் நஷ்டமடைவதாக அவர்கள் கூறுகிருர்கள். அவர்களுக்கு லாபம் வந்தாலும் நஷ்டம் வந்தாலும் போனஸ் கொடுக்கவேண்டுமென்பது ஒப்பந்தம். அப்படியிருக்கும்போது அவர்கள் இப்போது எவ்வாறு போனஸ் கொடுக்க மறுக்கலாம். அவர்கள் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கமுடியும் என்று எனக்குத் தெரியவில்லே. இதுவரை அவர்கள் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிருர்கள் என்றும் தெரியவில்லே. இதை கனம் அமைச்சரிடம் தெரிவித்திருக்கிறேன். அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்தும் போட்ட பிறகும் ஒரு முதலாளி போனஸ் கொடுக்காமல் தொழிலாளர்களே ஏமாற்றி வருகிருர். கனம் அமைச்சர் இந்தப் பிரச்னேயை கவனிக்கவேண்டும். ஏதாவது ஒரு செட்டில்மென்ட் ஏற்பட்ட பிறகு ஒரு முதலாளி கன்சிலியேஷன் தீர்ப்புப்படி நடக்கவில்லேயென்ருல், நிச்சயமாக அவர்களுடைய சங்கத் தலேவர்கள் கையெழுத்து போட்டுவிட்டால் சங்கத்திலே உள்ள தொழிலாளிகளேயும் தோட்ட முதலாளிகளேயும் கட்டுப்படுத்தும் என்ற காரணத்தால், அந்த முதலாளிபேரில் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

9 50 p.m. ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் இருக்கவேண்டும் என்று வற்புறுத்தியதற்குக் காரணம் சென்ற ஆண்டிலே 173 தொழிற்சங்கங்கள் புதிதாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. 1957–58-க்கான அறிக்கையில் சொல்லப்பட்டிருப்பதாவது :

**" The number of registered trade unions in the State at the beginning of 1957 was 651. During the year, 173 new unions were registered. A total of 775 trade unions were functioning at the end of the year."**

அதாவது, சென்ற ஆண்டின் ஆரம்பத்திலே 651 தொழிற் சங்கங்கள் இருந்தன. இந்த ஆண்டில் 173 புதிய தொழிற் சங்கங்கள் இந்த ராஜ்யத்திலே ஏற்பட்டிருக்கின்றன. 173 சங்கங்கள் ஒரு ஆண்டிலே எப்படி ஏற்பட்டது என்பது தெரியவில்லே. அவ்வளவு தனித்துறை இருக்கிறதா? தனித்தொழில்கள் இருக்கின்றனவா என்ற விவரம் இங்கே கொடுக்கப்படவில்லே. ஆனல், ஒரு தொழிலுக்குப் பல சங்கங்கள் ஏற்பட்ட காரணத்தால் ஒரு ஆண்டில் 173 சங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்று நான் நினேக்கிறேன். இப்படி ஏற்படுவதற்கு நாம் விட்டுக்கொண்டே போனல், இந்த நாட்டிலே ஆயிரக்கணக்கான சங்கங்கள் ஏற்படுவதற்குத் தடை இல்லே. அரசியல் கட்சிகள் ஆனலும்சரி வேறு துறைகளில் இருப்பவர்களும் சரி, முதலாளிகளின் கையாட்களானலும்சரி, தொழிற் சங்கங்களே ஏற்படுத்திக் கொண்டு போவார்கள். ஆகையால் இதை அதிகமாக வளர விடக்கூடாதென்பதற்காக ஒரு தொழிலுக்கு ஒரு சங்கத்திற்கு மேல் வைக்கக்கூடாதென்று ஏற்பாட்டைச் செய்ய வேண்டுமென்று அமைச்சர் அவர்களே நான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தவரையில் தோட்டத் தொழில் முக்கியமானது. நீலகிரியில் உள்ள தோட்டத் தொழிலுக்கும், கீழே, ப்ளெயின்களில் உள்ள தொழிலுக்கும் வித்தியாசம் இருக்கிறது. நீலகிரியில் தோட்ட தொழிலாளர்கள் படும் கஷ்டம் வேதனேக்குரியது. நாடு சுதந்திரம் அடைந்த பிறகு அவர்களுக்கு ஓரளவு சலுகை கொடுக்கப்பட்ட காரணத்தால் அவர்கள் இன்றைக்கு ஓரளவு நல்ல வாழ்க்கை நடத்துகிருர்கள். பழைய நிலேமையிலே அவர்கள் வைக்கப்பட்டிருந்தால் நிச்சயமாக தோட்ட தொழில் பாதிக்கப்பட்டிருக்கும். அவர்கள் செய்யும் தொழில் கடுமையானது மட்டுமல்ல, கஷ்டமானதும்கூட. அத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு என்ன என்ன சலுகை அளிக்கப்படவேண்டும் என்பதைப்பற்றி திட்டவட்டமாக ஆராய்ந்து, அதற்கென ஒரு திட்டம் ஏற்

25th March 1958] [Sri J. Matha Gowder]

படுத்தி, அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு இன்னும் அரசாங்கம் உற்சாகம் காட்டவேண்டும். முதலாளிகள் விஷயத்தில் அரசாங்கம் தயவு தாட்சண்யம் எந்தக் காரணத்தைக்கொண்டும் வைக்கக்கூடாதென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நானும் தொழில் வைத்திருக்கிறேன் என்றாலும்கூட முதலாளி தொழிலாளிகளை ஏமாற்றுவது எப்படி என்பதை நன்கு புரிந்துகொண்டிருக்கிறார்கள். நீலகிரியில் தோட்டத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களில் 100-க்கு 99 பேர் படிப்பு இல்லாத பாமர மக்கள். அவர்களை சுலபமாக ஏமாற்றிவிடலாம். அவர்களை ஏமாறும்படி விட்டுவிடக்கூடாதென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தோட்டத் தொழிலிலே ஈடுபட்டிருப்பவர்களுக்கு வீடு கட்டுவதற்காக தொகை ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது :

**" A sum of Rs. 36·46 lakhs has been allotted to this State for the Plan period. No loan was sanctioned during the year 1956–57. For the year 1957–58, a sum of Rs. 83,500 has been provided in the Budget, and is expected to be fully utilised. "**

83,500 ரூபாய் 1957–58-ம் ஆண்டிலே தோட்டத் தொழிலாளிகளுக்குக் கடன் கொடுக்க ஒதுக்கப்பட்டிருப்பதாக போடப்பட்டிருக்கிறது. ஆனால், அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்பதைப் பார்க்கும்போது முதலாளிகள் அந்தத் தொகையை வாங்கி தொழிலாளிகளுக்கு உதவ முன்வரவில்லை என்று தான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். தொழிலாளிகள் வீடு கட்டிக்கொள்ளுவதற்கு முதலாளிகள் பணம் இல்லை என்றும் சர்க்கார் கடன் கொடுக்கிறோம் என்று சொன்னாலும்கூட, முதலாளிகள் அதை வாங்கத் தயாராயில்லை. அப்படிச் சொல்லும்போது, தொழிலாளிகளை முதலாளிகள் இதுவிஷயத்தில் முன்னேறுவதற்கு இஷ்டப்படாத காரணத்தால், சர்க்கார் பணம் கொடுப்பதாகச் சொன்னாலும்கூட அதை வாங்காமல் இருக்கிறார்கள். ஆகையால் அதற்கு ஒரு சட்டம் போட்டோ, உத்தரவு போட்டோ சர்க்கார் கொடுக்கும் கடனை வாங்கி தொழிலாளிகளுக்கு வீடு கட்டிக்கொடுக்கும்படி முதலாளிகளைக் கட்டுப்படுத்தவேண்டும், அப்படி முதலாளிகள் முன்வரவில்லையென்றால், குறிப்பிட்ட ஆண்டுகளுக்குள் வீடு கட்டிக்கொடுக்கவில்லையென்றால் முதலாளிகள் பேரில் தக்க நடவடிக்கை எடுப்போம் என்ற முறையில் சட்டம் கொண்டுவர வேண்டும். அல்லது சர்க்குலர் பிரப்பிக்க வேண்டும். இந்த வகையில் அவர்களை பயமுறுத்த வேண்டும். நான் ஏன் முதலாளிகளை இந்த வகையில் பயமுறுத்த வேண்டும் என்று சொல்கிறேன் என்றால், சர்க்கார் பணம் கொடுப்பதாகச் சொல்லும்போது, முதலாளிகள் தொழிலாளிகளுக்கு வீடு கட்டிக்கொடுக்க வேண்டுமென்று சட்டம் இருக்கும்போது, தொழிலாளிகளுக்கு வீடு கட்டிக் கொடுப்பதற்காக சர்க்கார் கடன் கொடுக்கிறேன் என்று சொல்லும்போது முதலாளிகள் அதை வாங்க மறுக்கிறார்கள். இந்த நிலை வளரவிடக் கூடாது என்று நான் சொல்லிக்கொள்ளுகின்றேன்.

மலைத் தோட்டத்தொழிலில் மேஸ்திரிகள் என்ற ஒரு பிரிவினர் இருக்கிறார்கள். அவர்களைக் கங்காணிகள் என்று குறிப்பிட்டு, கங்காணி முறையை ஒழித்துவிடவேண்டுமென்று சொல்லப்படுகிறது. கங்காணிகளை ஒழிக்கவேண்டுமா, ஒழிக்கக்கூடாதா என்பதைப்பற்றி இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் யோசனை செய்திருக்கிறார்கள். அவர்கள் கங்காணி என்றாலும், அவர்களும் தொழிலாளர்கள் தான். அவர்களுக்குப் பதிலாக சூபர்வைசர் என்று போடவேண்டுமென்று சொல்லப்படுகிறது. சூபர்வைசர்களாக நியமிப்பதாயிருந்தால் எப்படிப்பட்டவர்களை நியமிப்பது? யார் நியமிப்பது? சர்க்கார் நியமிப்பதா? தொழிற்சங்கங்கள் நியமிப்பதா? அல்லது முதலாளிகளே நியமிப்பதா என்ற முறையில் வித்தியாசங்கள் இருக்கின்றன. முதலாளிகள் நியமிப்பதென்றால் சூபர்வைசர்களுக்கு என்ன யோக்கியதாம்சங்களை நிர்ணயித்திருக்கிறார்கள்? என்ற எந்த விதமான விவரமும் தெரியவில்லை. சூபர்வைசர்களை முதலாளிகள் நியமிப்பதாயிருந்தால் பழைய மேஸ்திரிகளையே சூபர்வைசர்களாகப் போட்டுக்கொள்ள வேண்டும். அப்படியில்லாவிட்டால். பழைய மேஸ்திரிகளுக்குப் போதிய படிப்பு இல்லையென்றும், சக்தி இல்லையென்றும் சொல்லி அவர்களை

[Sri J. Matha Gowder] [25th March 1958

முதலாளிகள் ஒழித்துக் கட்டிவிடுவார்கள். ஆகையால், இன்று மேஸ்திரிகளாக வேலை செய்பவர்களையெல்லாம் நிரந்தரமான முறையில் சூபர்வைசர்களாக்கி உத்தரவு போடவேண்டுமென்று அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

நீலகிரி ஜில்லாவில் உள்ள லேபர் ஆபீசர்களுக்கு எந்தவிதமான வசதியும் இல்லை. அவர்கள் மலைப் பிரதேசத்தில் வசிப்பவர்கள். கன்சிலியேஷனுக்கு அவர்கள் பல இடங்களுக்குப் போகும்போது மிகவும் சிரமப்படுகிறார்கள். ஆகவே, அவர்களுக்குத் தயவு செய்து சர்க்கார் ஒரு ஜீப் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கின்றேன்.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ** : கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து நான் சில விஷயங்களை அவருடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இந்த தொழிலாளர்கள் விஷயம் என்
9–56 a.m. றாலே கடந்த காலத்திலே அது பலவிதமான பலாத்காரச் சம்பவங்கள் நிறைந்த ஒரு சரித்திரம் என்றே கூறுவார்கள். அந்த நிலை எல்லாம் இப்பொழுது மாறி ஒரு அமைதியான நிலைமையிலே தொழிலாளர்கள் போராட்டங்கள் நடத்துகிறபோதுகூட அவர்கள் உரிமையோடு தங்களுடைய வாதங்களை எடுத்துக்கூறி, தொழில் கோர்ட்டிலே நல்ல பல தீர்ப்புக்களை காண்கிற காலம் இது. என்ன நிலைமை இருந்தபோதிலுங்கூட பலாத்கார நிலைமை அல்லாமல் தங்களுடைய கோரிக்கையைச் சிறந்த முறையில் எடுத்து விவாதிக்கும் தன்மையை நம்முடைய காங்கிரஸ் அரசாங்கம் அளித்திருக்கிறது. கடந்த காலத்தில் மதுரைமா நகரில் பல ரத்த வெள்ளங்கள் ஓடியதைக் கண்ணால் பார்த்தோம். தொழிலாளர்கள் கடந்த காலத்திலே ஏதாவது உரிமை வேண்டுமென்று கூறுகிறபோது அந்தத் தொழிற் சங்கங்கள் அந்தந்த தொழிற்சாலையிலே பெரும் போராட்டங்களை நிகழ்த்தித்தான் ஏதாவது சிலபல நன்மைகளைப் பெற முடிந்தது. அதுபோன்று நெடுங்காலம் இதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு தொழிற்சங்க இயக்கத்தை தனக்கு உரிமைக்காக வைத்துக்கொண்டு கம்யூனிஸ்டுகள் கடந்த காலத்திலே இந்தத் தேசத்திலே பல பெரிய கிளர்ச்சிகளைச் செய்துகொண்டு வந்தார்கள். தொழிலாளர்களுக்கு உரிமை பெறுவது என்பது மட்டும் அவர்களுடைய நோக்கம் அல்ல. அதன் மறைவிலே அவர்கள் அரசியல் ஆதிக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகப் பல பெரிய போராட்டங்களை நடத்தியிருக்கிறார்கள். இந்தியாவிலேயே கடந்த காலத்தில் ஒரு சமயத்தில் பார்க்கும்போது தொழிலாளர்களுக்கு இந்த நாட்டின் மீது பற்று இருக்கிறதா இல்லையா என்று சந்தேகிக்கும் அளவுக்கு அந்தத் தொழிற்சங்கங்களைக் கொண்டு அவர்கள் நடத்திக்கொண்டு வந்தார்கள். அது எல்லாம் இப்பொழுது மறைந்து இப்பொழுது நல்ல ஒரு சமூகமான நிலைமையிலே தொழிலாளர்கள் தங்களுக்கு வேண்டிய உரிமைகளை நல்ல முறையிலே எடுத்துக்கூறும் அளவுக்கு இன்றைக்கு வந்திருக்கிறது என்று சொன்னால், இந்த நிலைமையிலே இந்திய தேசிய தொழிற்சங்கக் காங்கிரஸ் இந்த அரசியலில் பிரவேசித்ததற்குப் பிறகு இதுபோன்ற நல்லதோர் சூழ்நிலை ஏற்பட்டிருப்பதை நாம் மறந்துவிடுவதற்கில்லை.

குறிப்பாக மதுரையின் தலைநகரில் நடந்த பெரும் போராட்டங்கள் தெரியும். கடந்த காலத்தில் தொழிலாளர்களுக்காகவும் முத்துராமலிங்க தேவர் அவர்கள் தலைமை தாங்கி பல போராட்டங்கள் நடத்தியிருக்கிறார். இன்னும் பல கம்யூனிஸ்டுத் தலைவர்கள் திரு. ஜீவானந்தம், திரு. ராமமூர்த்தி போன்றவர்கள் எல்லாம் தலைமை வகித்து பல போராட்டங்களை நடத்தியிருக்கிறார்கள். அதற்குப் பிறகு மதுரைமா நகரில் பல காட்சிகளும், திடீரென்று பல இடங்களில் பலாத்காரங்களும் நிகழும். அதை அடக்குவதற்காக என்றே அங்கே போலீசார் தயாராகி இருக்க வேண்டிய காலம் எல்லாம் இருந்து மதுரைமாநகரத்தில் யோக்கியமான அரசியலுக்கு இடம் இருக்கிறதா என்று சந்தேகிக்கக்கூடிய அளவுக்கு இருந்து அங்கே ஒரு பலாத்கார வெறி தாண்டவம் ஆடிக்கொண்

டிருந்தது. அந்தப் பக்கத்தில் இன்று மதுரைமாநகரத்திலே பார்த்தால் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் மத்தியிலும் நல்லதோர் அரசியல் பூத்துக் குலுங்குகிறது என்று சொன்னால் அதற்குக் காரணம் தொடர்ந்த சட்டங்களும் அந்த அமைப்பிலே உள்ள சர்க்காரும்தான் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. கடந்த காலத்தில் இருந்து அரசாங்கம் வேறு. பிரிட்டிஷ் சாம்ராஜ்ய காலத்தில் தொழிலாளர்களுடைய உரிமை வேண்டுமென்றே நசுக்கப்பட்டது. அந்தச் சமயத்திலும் நமது காங்கிரஸ் கட்சி தொழிலாளர்களுடைய பக்கத்தில் இருந்து பெரும் ஆதரவு தந்திருக்கிறது. இன்றுள்ள நிலைமை என்ன? இன்று காங்கிரஸ் அரசாங்கம் நடைபெறுகிறது. தொழிலாளர்களுடைய போராட்டங்கள் பல நடைபெறுகின்றன. சில இடங்களில் முதலாளிகளே போராட்டங்களை உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக பழனியில் மதுரை மாவட்ட திராவிடக் கழக உபதலைவர் என்று சொல்லிக்கொண்டு இருக்கும் தண்டபாணி என்பவர் வைத்தியசாலைத் தொழில் நடத்துகிறார். அங்குள்ள தொழிலாளர்கள் ஊதியம் வேண்டும், தங்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்று கேட்டதற்கு பத்துப் பதினைந்து பேர்களை வேலையைவிட்டே நீக்கி விட்டார். உபாத்தியாயராக இருந்து, வைத்தியராக மாறி இன்றைக்கு லட்சக்கணக்கான ரூபாய்களுக்கு அதிபராக மகிழ்ந்து கொண்டிருக்கிற அவர் "தனக்கு அந்தத் தொழிலினால் வருமானம் கிடையாது, வருமானம் இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்பதாக பொய்யாக நஷ்டக் கணக்கைக் காட்டி தொழிலாளர்களுடைய உரிமை தவறானது என்பதாக நிரூபிக்கிறார். இந்த நஷ்டக் கணக்கை வைத்துக்கொண்டு தொழிலாளர்களுக்கு எப்படி சம்பள உயர்வுத் தீர்ப்பு அளிக்க முடியும். இந்த நிலைமையில் தொழிலாளர்கள் தத்தளித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதற்குள்ளே ரகசியம் இருக்கிறது. அவருடைய மருந்து எல்லாம் மலேயா நாட்டில் தான் அதிக விற்பனை ஆகிறது. இவருடைய தண்டபாணி என்ற பெயரையும் பார்த்து, பழனியில் இருந்து வருகிற மருந்து என்றும் எண்ணி, மண்ணோ மருந்தோ மலேயா நாட்டுத் தமிழர்கள் தெய்வத்தினிடம் கொண்ட பக்தியின் காரணமாக வாங்கி வருகிறார்கள். பழனியில் இருந்து வருகிற மருந்து, நிச்சயம் நன்மை பயக்கும் என்று நம்பி வாங்குகிறார்கள். இதிலிருந்து ஏராளமான பணம் அவருக்கு வந்து கொண்டிருக்கிறது. அவருடைய மருந்து மேலே நாடுகளுக்கு கல்கத்தா மூலமாகச் செல்கிறது. அங்குள்ள தபாலாபீசில் கணக்கு விவரம் இது பற்றி இருக்கும்.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, இங்கு பேசக்கூடிய நேரத்தில் தனிப்பட்ட நபர்கள் யாரையும் பற்றி குறிப்பிடக்கூடாது என்று தாங்கள் சொல்லும் கருத்துக்கு கனம் அங்கத்தினர் தற்போது பேசுவது பொருந்துமா? இதுவரையில் தாங்கள் வழங்கியிருக்கிற நீதிக்குப் பொருந்துமா என்று கேட்கிறேன்.? 10 00 a.m.

**MR. SPEAKER :** மான்ய விவாதத்தில் தனிப்பட்ட நபர்களுடைய பெயரைச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அதைவிட்டு விட்டுப் பொதுவாகச் சொல்லலாம்.

**SRI P. S. K. LAKSHMIPATHI RAJ :** ஒரு உதாரணத்திற்காகச் சொல்லி விட்டேன். பெயரை விட்டு விட்டு பொதுவாகச் சொல்கிறேன். அந்த முதலாளியினுடைய கணக்கை கல்கத்தா தபாலாபீஸ் மூலமாக ஒப்பிட்டுப் பார்த்தால் இங்கே அவர் கொடுத்திருக்கிற கணக்கு முழுவதும் பொய்யான கணக்கு என்று தெரிந்து கொள்ளமுடியும். அது இல்லாத காரணத்தினால் தொழிலாளிகள் ஒன்றும் செய்ய முடியாது. போராட்டத்தை நிறுத்தி விட்டார்கள். இன்றைக்கு அவர்கள் படுகிற கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. இதை நான் கட்சி மனோபாவத்தோடு சொல்லவில்லை.

இதே போன்று நாட்டில் பல நிகழ்ச்சிகள் நடந்து வருகின்றன. முதலாளிகள் பெரிய பெரிய தொழிற்சாலைகளைக் கட்டி தொழிலாளர்களுக்கு வேலை கொடுப்பதைப் பாராட்டுகிறோம். ஆனால் தொழிலாளர்களுடைய நிலைமை உயர்த்தப்பட வேண்டும். தொழிலாளர்களை வைத்துக்

கொண்டு தாங்கள் பணக்காரர்களாகப் பார்க்கிறார்களே தவிர உண்மையில் தொழிலாளர்களுடைய அடிப்படையான உரிமைகள் கூடப் பலவிடங்களில் வழங்கப்படுவதில்லை. கடந்த காலத்தில் பல தொழிலாளர்கள் வெளி நாட்டுத் தீவுகளுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். பாரதியார் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களைப் பற்றியும், கரும்புத் தோட்டத் தொழிலாளர் களைப்பற்றியும் பாடியிருக்கிற பாடல்களைப் பார்த்தால் அந்தத் தொழிலாளர் கள் எத்தனை கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாயிருக்கிறார்கள் என்பது தெரிய வரும். ஆனால் வருங்காலத் தொழிலாளர்களுடைய நிலைமை எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும் பாரதியார் தொழிலாளர்களின் உரிமைக் குரலை எழுப்பி பாதை வகுத்திருக்கிறார். அந்தப் பாதையில் தான் இன்றைக்கு நம்முடைய அரசாங்கம் சென்று கொண்டிருக்கிறது. அந்த முயற்சியின் பயனாக பல சட்டங்கள் வந்திருக்கின்றன. நல்ல தீர்ப்புகள் பல வழங்கப்பட்டிருக்கின்றன. ஆனால் பொதுவாக நியாய மான தீர்ப்பு வழங்குவதில் அதிகமான காலதாமதம் ஏற்படுகிற காரணத் தினால் பல போராட்டங்கள் சிதைந்து போகின்றன. அப்படியில்லாமல் துரிதமாகத் தீர்ப்புக் கிடைக்க வழி செய்ய வேண்டும். வால்பாறை போன்ற இடங்களில் உள்ள தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் படுகிற கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. தரையில் இருந்து தினமும் மலைக்குச் சென்று, அட்டைக் கடிகளை எல்லாம் பொறுத்துக் கொண்டு, கால் வீங்க, வயிறு வீங்க அவர்கள் மாலைக்கு வீடு வருவதும் மிகவும் பரிதாபகரமானதாகும். அவர்களுக்குப் போதுமான சுகாதார வசதியும் கிடையாது. அந்த ஏழை களுக்கு நல்ல சுகாதார வசதி, வைத்திய வசதி, வீட்டு வசதி முதலியன எல்லாம் வழங்குவதற்குத் தக்க ஏற்பாட்டை இந்தச் சர்க்கார் செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொண்டு நான் முடித்துக் கொள்கி றேன்.

* **Sri M. P. SARATHI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தொழில் மானியத்தின் மீது கொண்டுவரப்பட்டிருக்கிற வெட்டுப் பிரேர ணையை ஆதரித்து நான் என்னுடைய சில கருத்துக்களைச் சொல்லலாம் என்று விரும்புகிறேன். முக்கியமாக சுதந்திரம் வந்து பத்து ஆண்டு களுக்கு மேலாகின்றன. இந்தப் பத்து ஆண்டு காலத்திற்கு முந்தி தொழிலாளர்களுடைய நிலைமை எப்படி இருந்ததோ அதேமாதிரியாகத் தான் இன்றைக்கும் தொழிலாளர்களுடைய நிலைமை இருந்து கொண்டி ருக்கிறது. வேண்டுமென்றால் கணக்கு எடுத்துப் பார்க்கலாம். தொழிலா ளர்களுக்கு யாதொரு விதமான நன்மையும் ஏற்படவில்லை என்று சொல்ல வேண்டியிருக்கிறது. குறிப்பாக வடாற்காடு மாவட்டத்தை எடுத் துக் கொண்டால் அங்கே பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பீடித் தொழிலாளர் கள் இருக்கிறார்கள். அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்குச் சட்டம் கொண்டு வருவதாக ஏறக்குறைய 6 மாதங்களுக்கு முன்பே அமைச்சர் அவர்கள் வாக்குக் கொடுத்தார்கள். இதுவரைக்கும் கொண்டு வரவில்லை. பல இடங்களில் பீடித் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் சட்டத்தைக் கொண்டுவர வேண்டும் என்பதாகப் பல மகா நாடுகள் நடைபெற்றிருக்கின்றன. சர்க்கார் கொண்டு வருவார்கள் என்றே இன்றளவும் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் இந்த வருஷமோ, இதற்கு அடுத்த வருஷமோ கூட அந்தச் சட்டம் வரும் என்று தோன்றவில்லை. பீடித் தொழிலாளர்களுக்கு உடனடியாகப் பாதுகாப்பு அளிக்க சட்டம் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் ஒரு தொழிற்சாலைக்கு ஒரு தொழிற் சங்கம்தான் இருக்க வேண்டும் என்பதாக மாதா கௌடர் அவர்கள் கூறினார்கள். நான் அது சம்பந்தமாக இந்தச் சர்க்காருக்கு ஒன்று ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ஒரு தொழிலுக்கு ஒரு தொழிற் சங்கம் இருக்க வேண்டியதுதான் நியாயம். ஆனால் அந்த ஒரு சங்கத்தினுடைய காரியதரிசி, தலைவர் போன்ற வர்கள் எல்லாம் அந்தத் தொழிற் ஸ்தாபனத்தில் ஊழியர்களாகவே இருக்க வேண்டும். அதை விட்டு, தங்கள் தங்கள் கட்சியினுடைய ஆதிக் கத்தை அந்தத் தொழிலாளர்களினால் பெற முடியும் என்கிற மனோபாவம் வளர்வதன் காரணமாகத்தான் இன்றைக்கு தொழிற்சங்கங்களிடையே போட்டா போட்டி மனப்பான்மை வளருகிறது. இதனால் தொழிலாளர்

25th March 1958] [Sri M. P. Sarathi]

களுடைய உரிமை பாதிக்கப்படுகிறது. ஆகவே, அந்தத் தொழிலாளர்களையே நிர்வாகிகளாகக் கொண்ட தொழில் சங்கங்களைத்தான் ரிஜிஸ்டர் செய்வது என்று சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன கட்சி ஆதிக்கியம் வேரூன்றவிடக்கூடாது.

அதோடு பீடித் தொழிலாளர்களுக்கு மாத்திரம் அல்ல, அச்சுத் தொழிலாளர்கள், மோட்டார் தொழிலாளர்கள் என்பதாகப் பல பல தொழில்களில் இன்றையதினம் ஈடுபட்டிருக்கிறவர்ளுடைய உரிமையும் நசுக்கப்படுகிறது. ஆகவே, பொதுவாக எந்தத் தொழிலில் ஈடுபட்டவர்களாக இருந்தாலும் கூட, எல்லாத் தொழிலாளர்களுடைய நலனையும் பாதுகாக்கும் வகையில் ஒரு பொதுவான சட்டத்தைச் சர்க்கார் கொண்டு வர வேண்டும் என்பதாகக் கேட்டு கொள்கிறேன். தினக் கூலி வாங்கிக் கொண்டிருக்கிற தொழிலாளர்கள் இருக்கிறார்கள். தனித்தனியாக ஒவ்வொரு தொழிலிலும் ஈடுபட்டிருக்கிறவர்களுக்கு என்று சட்டம் கொண்டு வராமல் பொதுவாகச் சட்டம் கொண்டு வர வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். அச்சுத் தொழிலாளர்களை எடுத்துக்கொண்டால் சிறிது நேரம் கழித்து வந்தாலும் உடனே வீட்டுக்குப் போகச் சொல்லி விடுகிறார்கள். மின்சாரத் தொழிலாளர்கள் படுகிற கஷ்டம் நமக்குத் தெரியும். மின்சார ஆலோசனை போர்டில் மின்சாரத் தொழிலாளர்களைப் போட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். இத்தொழிலாளர்களுக்கு என்ன தெரியும் என்று சர்க்கார் நினைத்தார்களோ என்னவோ? அந்தத் தொழிலாளர்களுடைய நிலைமை மிகவும் மோசமாகப் போய்க்கொண்டிருக்கிறது. பொதுவாக எல்லாத் தொழிலாளர்களும் நன்மை அடையக்கூடிய வகையில் பொதுவான ஒரு சட்டத்தைக் கொண்டு வருவதுதான் தோதாக இருக்கும் என்று சொல்லிக் கொள்கிறேன். இந்த நிலைமையிலேயே தொழிலாளர்களுடைய நிலை போய்க்கொண்டிருந்தால் நாட்டின் வருங்காலம் சீரழிந்து விடும் என்று சொல்லிக் கொண்டு, அப்படிச் சீரழிந்து போகாமல் இருக்க தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதகாக் கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. LAZAR**: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய மானிய கோரிக்கையை ஆதரித்து நான் எனது கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். முதல் முதலாக தொழிலாளர்கள் சம்பந்தமாக அரசாங்கம் கையாண்டு இருக்கக் கூடிய கொள்கையை அவர் மிக அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள் அவர்களுடைய அறிக்கையில். அதை வரவேற்கிறேன்.

10–10 a.m.

ஒவ்வொரு தொழிலாளிக்கும் அவனுக்குள்ள லிவிங் வேஜஸ் கிடைக்க வேண்டும். மேலும் பல வசதிகளும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டும். தகராறுகள் ஏற்பட்டால் கோர்ட் மூலமாக மட்டுமே தீர்த்துக்கொள்ள முடியும் என்ற நிலைமை மாறி அதற்காக சமரசம் பேசியும் கூட தீர்க்க வழி செய்ய வேண்டுமென்று சட்டம் வகுத்திருக்கிறோம் என்றெல்லாம் கொள்கையை அழகாக எடுத்துச் சொல்லி இதிலும் கொடுத்திருக்கிறார்கள். இந்தக் கொள்கையை ராஜ்ய சர்க்கார் கையாண்டு வருகிறதா இல்லையா என்பதை பரிசீலனை செய்து அதன் பேரில் இந்த பத்து ஆண்டு காலமாக இந்த அரசாங்கம் ஆட்சியை ஏற்றுக்கொண்டதில் இருந்து இந்தக் கொள்கை எழுத்தளவில்தான் இருக்கிறது, நடை முறையில் வரவில்லை என்ற காரணத்தைச் சொல்லி அப்படிச் சொல்வதற்கு குறிப்பிட்ட காரணங்களை எடுத்துக் காட்டி எதிர்க்கட்சியில் இருந்து பேசிய, வெட்டுப் பிரேரணையை கொடுத்த அங்கத்தினர் அவர்கள் சொல்லியிருப்பார்களேயானால் அது மிகவும் பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால், அதற்குப் பதிலாக ஒரேயடியாக இந்த அரசாங்கம் தொழிலாளர் பிரச்னையில் எந்த வித அக்கறையும் காட்டவில்லை என்று ஒரேயடியாக அடித்துப் பேசுவது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானதாகும். அது இந்தச் சபையின் கௌரவத்திற்கு பொறுத்தமாகாது என்றும் நினைக்கிறேன். அடுத்தபடியாக, அவர்கள் பேசும் போது குறிப்பிட்டுச் சொன்னார்கள், இந்த அரசாங்கம் தொழிலாளர்களுக்கு எந்த விதமான உதவியும் செய்யவில்லை என்று சொன்னார்கள். ஆனால் அவர்கள் மனதிலே வைத்துக்கொண்டு பேசியதெல்லாம் ஏதோ தாங்கள் கொடுத்த ஒரு, சில பிரச்னைகள், அல்லது கோரிக்கைகள் முற்றிலும்

[Sri S. Lazar] [25th March 1958

வரவேற்கப்படவில்லை என்ற ஒரு காரணத்தினால் என்னவோ அவர்கள் இந்த இடத்தில் தங்கள் மனக் குமுறல்களை வேறு வகையில் எடுத்துச் சொன்னார்கள் ஆனால் பொதுப்படையாக பேசும்போது இந்த பத்து ஆண்டு காலத்தில் எத்தனை எத்தனையோ சட்டங்கள், எத்தனை எத்தனையோ காரியங்களை அரசாங்கம் செய்து வந்திருக்கிறது என்று பரிசீலனை செய்து பார்ப்பார்களேயானால், அதைப் பற்றி விவரமாக பேசவேண்டுமென்று சொன்னால் காலம் கண்டிப்பாக இடம் தராது. ஆனால் அதைப் பற்றிய பட்டியல் வேண்டுமென்று சொன்னால் நிறைய இருக்கிறது என்று மட்டும்தான் நான் சொல்லிக்கொள்ள முடியும். அப்படியிருக்கும்போது எதுவுமே அரசாங்கம் செய்யவில்லை என்று, அதிலும் குறிப்பாகப் பக்கிரி சாமி பிள்ளை போன்றவர்கள் சொல்கிறார்கள் என்று சொன்னால், அவர்களை ஏமாற்றம் அடைய முடியாத ஒரு நிலையில் மீண்டும் மீண்டும் இந்த சபைக்கு தேர்ந்தெடுத்து வரக்கூடிய அளவிற்கு அவர்கள் கேட்கக்கூடிய கோரிக்கைகளை சர்க்கார் ஏற்று நடை முறையில் காண்பித்திருக்கிறார்கள் என்று பொருள்படுமே ஒழிய அவர்களுடைய வாதம் இந்தச் சபையில் இருக்கக்கூடிய முறைக்கு புறம்பாக இருக்கிறது என்று எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். நான் சொல்லக்கூடியதெல்லாம், இன்னும் அதிகம் அதிகமாக சலுகைகள், அதிகம் அதிகமான தேவைகள் இன்னும் தொழிலாளர்களிடம் இருக்கிறது, அவைகளைப் போக்க வேண்டுமென்ற முறையிலே எடுத்துச் சொன்னால் அது நியாயமாக இருக்கும். அப்படிப் பார்க்கும்போது இன்று அரசாங்கம் மினிமம் வேஜஸ் ஆக்ட், குறைந்த பட்ச சம்பளம் இருக்கவேண்டுமென்று சட்டம் கொண்டு வந்திருக்கிறது. அந்தச் சட்டத்தின் அடிப்படையில் பல தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயித்திருக்கிறார்கள். ஆனால் இன்னும் பல தொழில்களுக்கு இந்த குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயிக்கபடவில்லை. அதிலும் குறிப்பாக, நிலத்தில் வேலை செய்யக் கூடிய விவசாயிகளுக்கு, நியாயவாரம் கிடைக்கவேண்டுமென்று நாம் எப்பொழுது திட்டமிட்டோமோ, எப்படி அவர்களை அனுவசியமாக நிலத்திலிருந்து வெளியேற்றக்கூடாதென்று இந்தச் சபையில் சட்டம் கொண்டு வந்தோமோ அதே முறையில் இந்த விவசாயிகளின்கீழ் வேலை செய்யும் தொழிலாளர்கள், அன்றாடம் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும் நியாயமான சம்பள விகிதம் நிர்ணயித்தால் இன்று நாட்டில் இருக்கிற குமுறல் அநேகமாக அடங்கி விடும், அதோடு நல்ல முறையில் விவசாயத் துறையிலும் முன்னேற்றம் காண முடியும் என்று நான் இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக, இன்சூரன்ஸ் பெனிபிட்ஸ். அவை பல சிப்பந்திகளுக்கு அளிக்கப்படவேண்டுமென்ற முறையில் சட்டம் கொண்டு வந்திருக்கிறோம். ஆனால் எல்லாத் தொழில்களுக்கும் அது விஸ்தரிக்கப்படவில்லை. குறிப்பாக சிமெண்ட் தொழிற்சாலைகளுக்கு அது விஸ்தரிக்கப்படவில்லை. ஆகவே அங்கெல்லாம் இதை விஸ்தரிக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். குடியிருப்பிற்கு வீடுகள் கட்ட சர்க்கார் முயற்சி எடுக்கிறது. ஆனால், டால்மியா சிமெண்டு, மதுக்கரை சிமிண்ட் தொழிற்சாலைகளில், அவர்கள் ஏராளமாக லாபம் அடைந்து வருகிறார்கள் என்பதை நான் கண்கூடாக கண்டும் கூட, அவர்கள் அங்கு வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு கண்டிப்பாக வீட்டு வசதி அளிக்கவேண்டுமென்ற முறையில் வீடு கட்டும் திட்டத்தை அவர்களிடம் கொடுத்து கண்டிப்பாக அத்தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டுமென்று நம் அரசாங்கம் அவர்களிடம் கூறவேண்டும்.

Mr. CHAIRMAN : (Sri M. D. Ramasami) அடுத்தபடியாக, கரிய கௌண்டர். . . . . .

Sri S. LAZAR : I have been speaking only for five minutes. May I know how much time has been allotted to me, Sir?

Mr. CHAIRMAN (Sri M. D. Ramasami) : Ten minutes have been allotted to you.

25th March 1958]

**Sri S. LAZAR** : I have been speaking only for five minutes. அடுத்தபடியாக, இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட். அதன் கீழ் பல சட்ட திட்டங்கள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. சர்க்கார் அதன் மேல் நல்ல அக்கரை எடுத்து பல கன்ஸிலியேஷன் போர்டுகள் ஏற்பட்டிருக்கின்றன. கன்ஸிலியேஷனும் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் இந்த கன்ஸிலியேஷன் மிகவும் காலதாமதமாகிறது. அப்படி காலதாமதம் ஏற்படுகிற காரணத்தினால் தொழிலாளர்களுக்கு கிடைக்க வேண்டிய சலுகைகள், அவர்கள் கேட்கக்கூடிய முக்கியமான கோரிக்கைகள் எல்லாம் காலம் கடந்து தான் கிடைக்கின்றன. அதில் நல்லதொரு நிவாரணம் கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு. கன்ஸிலியேஷன் போர்டுகள், விரைவிலே அவர்களுக்கு நிவாரணம் அளிக்கும் முறையில் சர்க்கார் நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக, மைன்ஸ் டிஸ்ப்யூட்ஸ். நம் ராஜ்யத்தில் பல சுரங்கங்கள் இருக்கின்றன. இன்றைய நிலையில் சுரங்கங்கள் மத்திய அரசாங்கத்தின் கீழ் இருக்கின்றன. இந்த சுரங்கங்கள் எல்லாம் நம் அரசாங்க கன்ஸிலியேஷன் ஆபீஸரிடம், லேபர் ஆபீஸரிடம் அளிக்கப்படவேண்டும். அவர், இவைகளை எடுத்து நடத்த வேண்டுமென்ற முறையில் சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருந்தார்கள். அந்த முறையில் நல்லகாரியங்கள் எல்லாம் சென்ற ஆண்டு நடைபெற்று வந்தன. ஆனால், இந்த ஆண்டு ஏனோ அந்த ஒரு உத்தரவை மீண்டும் அளிக்க மறந்து விட்டார்களோ அல்லது மறுத்து விட்டார்களோ தெரியவில்லை. ஆகவே, மைனிங் டிஸ்ப்யூட்ஸ் எல்லாம் மத்திய அரசாங்கம் ரீஜனல் கமிஷனரிடம் செல்ல வேண்டியிருக்கிறது. அதனால் கால தாமதமாகிறது. மைனிங் நம் அரசாங்கத்திடம் இருந்தால் நல்லது அங்கு தகராறுகள் ஏற்படுமானால் அங்கு நிலைமை மிகவும் மோசமாகி விடுகிறது. அந்த இடத்தில் சமாதானத்தை நிலை நாட்ட முடியவில்லை. ஆகவே, சமாதானத்தை நிலை நாட்ட வேண்டுமென்றால், அந்த அதிகாரத்தை நாம் வைத்துக்கொண்டால்தான் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக எத்தனையோ பெரும் தொழில்கள் எல்லாம் நம் ராஜ்யத்தில் இருக்கிறது. ஏனைய நாடுகளில், குறிப்பாக வடக்கு இருக்கக்கூடிய பல ராஜ்யங்களில் கூட பெரிய தொழில் அதிபர்கள் தொழிலாளிகள் ஒரு சிலரைப் பொறுக்கியெடுத்து அவர்களை மேற்படிப்பிற்காக, தனிப்பட்ட சில ஸ்பெஷல் படிப்புக்காக அனுப்பி அவர்களை தயார் செய்கிறார்கள். ஆனால் நமது ராஜ்யத்தில் இருக்கக்கூடிய தொழில் அதிபர்கள் யாரும் அந்த விதமான ஒரு முறையையும் கையாளுவது இல்லை. சர்க்கார் இதற்கு அக்கரை எடுத்துக்கொண்டு இது போன்ற தொழிலாளர்களை வெளி நாடுகளுக்கு அனுப்பி அவர்களுக்கு பயிற்சியை கொடுத்தால் மேலும் தொழில் உற்பத்தி பெருகும். பல விதமான தொழில்கள் முன்னேறும் என்பதோடு கூட இருக்கக்கூடிய தொழில்கள் நல்ல முறையில் இயங்குவதற்கு அவர்கள் உதவி செய்ய முடியும்.

கடைசியாக சமீபத்தில வேஜ் போர்டு ஒன்று நிறுவப்பட்டது. அதன் மூலம் பல நல்ல தீர்ப்புகள் கொடுக்கப்பட்டன. அதிலும் சட்டம் சரியாக போடவில்லை என்ற காரணத்தால் டெல்லியிலுள்ள சுப்ரீம் கோர்ட் (அல்ட்ரா வயர்ஸ்) முரண்பட்டது என்ற தீர்ப்பை அளித்து இருக்கிறது. இதனால் அதிகம் பேர்கள் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். அரசாங்கம் இதில் அக்கரை காட்டி அவர்களுக்கு கூடிய சீக்கிரத்தில் நிவாரணம் அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக தொழில் பிரச்னையை நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு நாட்டில் தொழிலாளி, முதலாளி என்ற பாகுபாடு அதிகமாக இருந்து கொண்டிருப்பதால் நாட்டில் "இண்டஸ்ட்ரியல் பீஸ்" நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது. இந்த நிலையை நாம் நீக்கவில்லையானால் நாம் முன்னேற்றம் காண முடியாது. இதை நீக்குவதற்கு தொழிலாளர்களும், முதலாளிகளும் ஒத்துழைக்க வேண்டும். அதிலும் முக்கியமாக "ஸ்மைல்ஸ்" என்ற பிரஞ்சு எழுத்தாளர் சொன்னது போல் நாட்டில் தொழிலாளி, முதலாளி என்பதும் பணக்காரன், ஏழை என்பதும் முக்கிய பிரச்னை அல்ல, சிக்கனமாக வாழத்

தெரிந்தவன், சிக்கனமாக வாழத் தெரியாதவன் என்கிற பாகுபாட்டைத் தான் நாம் கவனிக்கவேண்டும் என்று சொல்லி இருப்பதுமாதிரி சிக்கனமாக வாழ்க்கையை நடத்துவதற்கு அரசாங்கம் தொழிலாளர்களுக்கு வழிகளை எடுத்துச் சொல்லி தொழிலாளர்களை முன்னேற்ற வேண்டும். குறிப்பாக தொழிலாளர்கள் இயக்கத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் இதை மனதில் கொண்டு இதற்கு நல்ல முறையில் ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

Sri T. KARIA GOUNDER : தலைவர் அவர்களே கனம் தொழில் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதே சமயத்தில் குறிப்பாக நமது நாட்டில் சொல்லவேண்டுமென்றால் எல்லா தொழில்களும் தேசீய மயமாகவேண்டும் என்ற கருத்தை என்
10-20 a.m. போன்றவர்கள் கொண்டிருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்களிடம் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். தொழில்களை தேசீய மயமாக்குகின்ற நேரத்தில்தான் நாட்டினுடைய வளர்ச்சியும் பெருகும். இதைப்பற்றி நான் அமைச்சர் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. பல தேசங்களுடைய தொழில்களைப் பற்றி நமது அமைச்சர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இந்த நாட்டில் தொழில்களுக்கு பல சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தும் கூட கனம் பக்கிரிசாமி பிள்ளை போன்றவர்கள், அவர்களுக்கு நீண்ட நாளைய தொழிற்சங்க அனுபவம் உண்டு. அவர்கள் கூட சர்க்கார் தொழிலாளர்களுக்கு வேண்டி ஒன்றும் செய்யவில்லையே என்று சொன்னது வியப்பாக இருக்கிறது. காரணம் என்னவென்றால் தொழிலாளர்களுடைய பிரச்னையை தீர்ப்பதற்கு மேலும் மேலும் லேபர் கோர்ட்டுகள் இருக்கிறது. அதன் பின்னாலும் ட்ரிப்யூனல் ஜட்ஜ் இருக்கிறார். எவ்வளவு தான் சலுகை செய்தாலும் தொழிலாளர்களுக்கு ஒன்றும் இந்த அரசாங்கம் செய்யவில்லை என்று எதிர்க்கட்சியிலுள்ள ஒவ்வொரு அங்கத்தினர்களும் சொல்லுவதை தயவு செய்து விட்டு விடுமாறு அவர்களை நான் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். முதலாளிகளும் கஷ்டப்படுகிறார்கள். கோர்ட்டுகளில் அகப்பட்டுக்கொண்டு அவர்களும் சிரமப்படுகிறார்கள். தொழிலாளர்களிடத்திலும் நாம் குறைகளைக் காண்கிறோம். கோர்ட்டுகளின் தீர்ப்பின்படி தொழில்கள் எல்லாம் முடிந்து போகுமானால் என்ன செய்ய முடியும் என்று முதலாளிகள் சிரமப்படுகிறார்கள். நான் முதலாளியும் அல்ல, பெரிய தொழில் அதிபரும் அல்ல. விவசாய தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்வதற்கு ஒரு விதமான சட்டம் கொண்டு வரவேண்டுமென்று சர்க்காரால் ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது. ஆனால் இன்னும் அது நடைமுறையில் வரவில்லை. விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்வார்களானால் என்னைப் போன்ற விவசாயிகள் பெரிதும் பலன் அடைவார்கள். இப்போது கூலிகள் எல்லாம் முன்பு இருந்ததை விட பத்து மடங்கு கூடுதலாக கொடுத்து வருகிறோம். யுத்த காலத்தை விட இப்போது 4 அல்லது 5 மடங்கு வாழ்க்கைத் தரம் உயர்ந்திருந்தாலும் அதே நேரத்தில் விவசாயக் கூலியாக இப்போது முன்னைவிட 10 மடங்கு அதிகமாக கொடுக்கவேண்டிய நிலைமையிலிருக்கிறோம் என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பீடித் தொழிலாளர்களுக்கு சட்டம் கொண்டு வருவதைப் பற்றி நண்பர் சாரதி அவர்கள் சொன்னார்கள். என்னைப் பொறுத்த வரையில் அனேக பீடித் தொழிலாளர்களின் வோட்டையும் பெற்றிருக்கிறேன். அன்றைய தினம் அவர்கள் கேட்டார்கள். கோயமுத்தூர் ஜில்லாவில் பீடித் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்படுகிற சலுகைகள் எங்களுக்கும் கிடைக்கவேண்டும் என்று எங்கள் ஜில்லாவிலுள்ள பீடித் தொழிலாளர்கள் கேட்டார்கள். அப்போது எல்லா தொழிலாளர்களுக்கும் ஒரே மாதிரியான கூலி நிர்ணயம் செய்ய வேலை செய்கிறோம் என்று வாக்கு சொன்னோம். இப்போது அது பல மாதங்களாக பரிசீலனையில் இருக்கிறது. அதை கூடிய சீக்கிரமாக நிறைவேற்றித்தரவேண்டுமென்று அமைச்சர் அவர்களிடத்தில் கேட்டுக்கொள்கிறேன். எங்கள் ஜில்லாவில் குறிப்பாக தொழில் முன்னேற்றத்திற்காக அரசாங்கம் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் அடிக்கடி சிறிய சிறிய தொழில்களை ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது. ஆனால் பெரிய தொழில்களை நிறுவு

25th March 1958] [T. Karia Goundar]

வதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை என்று நாங்கள் சொன்னால், அதற்கு அரசாங்கம் இது பக்கத்தில் இருக்கிறது, அல்லது இந்த ஜில்லாவில் இதற்கு முயற்சி செய்யக்கூடியவர்கள் இல்லை என்று அரசாங்கம் கருதுகிறதோ என்னவோ தெரியவில்லை. இதற்காக முதல் திட்டத்திலும், இரண்டாவது திட்டத்திலும் எங்கள் ஜில்லா சேர்க்கப்பட வில்லை என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இரண்டாவதாக ஒரு தொழில் பள்ளிக்கூடம் வட ஆற்காடு ஜில்லாவில் ஆரம்பிக்கவேண்டும் என்று அந்த இலாகாவிடம் அணுகியபோது சர்க்கார் ஒரு பகுதி உதவி அளிக்கும், மற்றொரு பகுதி நாங்கள் அளிக்க முடியுமா என்று கேட்டு எழுதியிருந்தார்கள். நாங்கள் பணம் கொடுப்பதானது விவசாயத் தொழிலுக்காக என்றால் எங்களால் கொடுக்க முடியுமே தவிர தொழில் பள்ளிக்கூடங்கள் நடத்துவதற்காக ரொம்பவும் பிற்போக்கான எங்கள் ஜில்லாவிலிருந்து கொடுப்பது இயலாத காரியமாக இருக்கிறது. எங்கள் ஜில்லாவில் அநேகம் பேர்கள் ஸ்கூல் ஃபைனல் வரை படித்துவிட்டு வேலையில்லாமல் இருக்கிறார்கள். இந்தப் பள்ளிக்கூடம் வருவதாக இருந்தால் அவர்களுக்கு பலன் அளிக்கக்கூடியதாக இருக்கும் என்பதை அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். கைத் தொழில் விஷயத்தில் சிறிய தொழிலாக வெல்ல உற்பத்திக்காக, கரும்பு அதிகமாகக் கிடைக்கும் எங்கள் ஜில்லாவில் இந்த சிறிய தொழிலை ஆரம்பிக்க வேண்டிய முயற்சி எடுத்துக்கொண்டிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடி யாக நாட்டில் தொழில்களை தேசியமயமாக்கும் விஷயத்தில் போக்கு வரத்து இலாகாவை அரசாங்கம் ஏற்றெடுத்து நடத்தி வருகிறது. இப்பொழுது குறிப்பிட்ட ஜில்லாவில் மாத்திரம்தான் தேசிய மயமாக்கப் பட்டிருக்கிறது. இந்த விஸ்தரிப்பு மற்ற ஜில்லாக்களுக்கும் கொண்டு வரவேண்டும் என்று கைத்தொழில் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொண்டு அவர்கள் இதற்காக வேண்டிய முயற்சிகள் எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற ஆண்டில் எல்லாம், அதாவது இப்போதுள்ள அமைச்சர் அவர்கள் இதைப் பொறுப்பு எடுப்பதற்கு முன்னால் ரோடு களில் பஸ் அதிகமாக நிற்கும். இப்பொழுது எந்த இடத்திலும் பஸ் நிற்பதைப் பார்க்க முடியாது.

Sri N. K. PALANISAMI : இப்போதும் பஸ் ரோடுகளில் நிற்கிறது.

Sri T. KARIA GOUNDER : நண்பர் பழனிசாமி கவுண்டர் அவர்கள் இப்போதும் பஸ் நிற்பதாகச் சொல்லுகிறார். இப்போதும் ரோடுகளில் பஸ் ஸ்டாப்புகளில் பஸ் நிற்கிறதே தவிர முன் இருந்தது மாதிரி கண்டக்டர் இல்லாமல் ட்ரைவர் இல்லாமலும் பஸ் நிற்பதை பார்க்க முடியவில்லை என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

அந்த மாதிரி அவர்களுடைய துறையிலே அவர்கள் வெகு திறமையாக 10 30 a.m. செய்கிறார்கள். இதையெல்லாம் மற்ற ஜில்லாக்களுக்கும் கொண்டுவந்து தேசியமயமாக்கினால் இந்த உபத்திரவம் இருக்காது. வரி போடுங்கள், வரி போடாதீர்கள் என்ற முறையீடு இருக்காது. குறைவான பட்ஜெட் போட்டிருக்கிறார்கள் என்று எதிர்க்கட்சிகளெல்லாம் பேசமாட்டார்கள். இதனால் பல கோடி ரூபாய் வருமானம் வரும். இந்த என்.ஜி.ஓ. கூட்டங் களுக்கு அவசியம் இருக்காது. அவர்களுக்கு நாம் அள்ளி அள்ளி கொடுக்கலாம். நாம் வாரி வாரிக் கொடுக்கலாம். அத்துடன் மத்திய சர்க்கார் திட்டங்களுக்கும் கொடுக்கலாம். அவர்கள் கொடுக்கும் சம்பளத் தையும் நம்முடைய ஊழியர்களுக்கு கொடுக்க முடியும் என்று கனம் அமைச்சர் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் தலைவர் என்னைப் பார்க்கிறார்—எனக்குக் கொடுத்த 10 நிமிஷம் ஆகிவிட்டது என்பதற்காக. தலைவர் அவர்கள் அனுமதி கொடுத்ததற்கு நன்றி தெவிரிவித்துக்கொண்டு, அமைச்சர் அவர்களுக்கு இவற்றைச் சொல்லிக்கொண்டு என்னுடைய சிறிய உரையை முடித்துக்கொள்ளு கிறேன். வணக்கம்.

[25th March 1958

* SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, இந்தத் தொழில் மானியத்தின் மீது பேசும்போது, வெட்டுப்பிரேரணையை ஆதரிக்க முன் வந்திருக்கிறேன். சர்க்கார், தொழில் துறையிலே கையாளுகின்ற கொள்கையானது "பாலுக்கும் காவல்—பூனைக்கும் தோழன்" என்ற முறையிலே அவர்கள் தொழிலாளர்களுக்கு ஒரு பக்கம் பாதுகாப்புக் கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள் ; அதே சமயத்தில் முதலாளிகளுக்கும் அவர்கள் தோழனாக இருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது கடைசியிலே அவர்களுடைய கொள்கையிலே நிரந்தரமான முறையில் தொழிலாளர்களுக்கு நம் ராஜ்யத்திலே எந்த விதமான நன்மையும் ஏற்படாது என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

குறிப்பாக இந்த விவசாயத் துறையிலே ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களைப்பற்றி சொல்ல முன் வந்தால் இவர்களுடைய நிலைமை மிகவும் பரிதாபகரமான நிலைமையாக இருக்கிறது என்பதை யாரும் மறைக்க முடியாது. ஏனென்றால் இன்றைக்கு விவசாயத் துறையிலே பல லட்சோப லட்சக்கணக்கான மக்கள், குறிப்பாக ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களும் பின் தங்கிய வகுப்பினரும் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுடைய அன்றாட வாழ்க்கைக்கு இந்த விவசாயத்திலே காலை முதல் மாலை வரையிலும் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்தபோதிலும் அவர்களுக்கு ஒரு நாளைக்கு 2 அணா, அல்லது 4 அணா கிடைக்கிறது என்றால், இந்தச் சொற்பப் பணத்தை வைத்துக்கொண்டு இவர்கள் தங்களுடைய பெண்டு பிள்ளைகளை எப்படிக் காப்பாற்ற முடியும் ? விவசாயத்தையே நம்பி வாழும் இவர்கள் மத்தியிலே வறுமை, பஞ்சம், பசி, பட்டினி இவைகள் தாண்டவம் ஆடுகின்றது. ஆகவேதான் இந்தத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்சக் கூலி நிர்ணயம் செய்யவேண்டுமென்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சர்க்கார் வரையரை விதித்துக் கூறியிருக்கிறார்கள். குறைந்த பட்ச கூலி நிர்ணயிக்க ராஜ்ய சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்து ஒரு கமிட்டியை நியமித்து, அந்தக் கமிட்டி மூலம் பரிசீலனைகளைச் செய்து, சில சிபார்சுகளைச் செய்து, அவற்றை அட்வைசரி போர்டு அங்கீகாரம் செய்து, பின்னர் அந்த குறைந்த பட்ச கூலியை நிர்ணயம் செய்து அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். இதைத்தான் உடனடியாகச் செய்யவேண்டுமென்று மத்திய சர்க்கார் வலியுறுத்துவதாக நான் புரிந்துகொண்டிருக்கிறேன். ஆனால், நம் ராஜ்ய சர்க்கார் இதைச் செய்யாமல் கால தாமதம் செய்து கொண்டு வருவதாகத் தெரிகிறது. 1959-ம் ஆண்டு முடிவிற்குள் இந்த விவசாயத் துறையிலே ஈடுபட்டிருக்கின்ற விவசாயத் தொழிலாளர்களுக்குக் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்தாக வேண்டுமென்று மத்திய சர்க்கார் கூறியிருப்பதாக உணருகிறேன். அந்த கால வறையரைக்குள் நம் சர்க்கார் வேண்டிய நடவடிக்கை எடுத்து இந்த விவசாயத் துறையிலே ஈடுபட்டிருக்கிற தொழிலாளர்களுக்கு ஆவன செய்யவேண்டும். ஆனால் சர்க்கார் என்ன சொல்கிறார்கள் என்றால் இதிலே ஏராளமான சிக்கல்கள்—கஷ்டங்கள்—எல்லாம் இருக்கின்றன ; இது அனுபவ சாத்தியமல்ல ; ஏனென்றால் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் விவசாயத் துறையிலே ஈடுபட்டிருக்கிற விவசாயிகளுக்கு எப்படி நாம் ஏற்படுத்துவது என்ற முறையிலே இவர்கள் பேசுகிறார்கள். சாதாரணமாக இந்தக் கூலி பிராந்தியத்திற்கு பிராந்தியம், ஜில்லாவிற்கு ஜில்லா, தாலூகாவிற்கு தாலூகா வித்தியாசப்படுகிறது. அந்த முறையிலே இந்த கூலியை எப்படி நாம் "பிளாட் ரேட்" ஆக நியமனம் செய்ய முடியும். அதிலே பல வித அனுபவ சாத்தியக் கஷ்டங்கள் இருக்கின்ற காரணத்தால் இதைச் சுலபமாகச் செய்ய முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். நம் ராஜ்யத்திலே இது கஷ்டமாக இருந்த போதிலும் நம் பக்கத்தில் இருக்கிற திருவாங்கூர்–கொச்சி ராஜ்யத்தில் அப்படிச் செய்திருக்கிறார்கள் என்பதை நம் சர்க்கார் கவனித்துப் பார்க்கவேண்டும். அந்த ராஜ்யத்திலே விவசாய தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அது இப்போது நடைமுறையில் இருக்கிறது. அதைப் பற்றிக் கூட நேற்றுப் பேசும்போது எனது அருமை நண்பர் டி. எஸ். ராமசாமி பிள்ளை குறிப்பிட்டார்கள். கேரள ராஜ்யத்தில் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் நடை முறையில் இருக்கும்பொழுது நம் சர்க்கார் ஏன் செய்யக்கூடாது.

25th March 1958] [Sri M. Jagannathan]

எவ்வளவு கஷ்டம் இருந்த போதிலும், அனுபவ சாத்தியமாக இல்லாத போதிலும், அதை என் நம் சர்க்கார் நன்ருகப் பரிசீலனை செய்து, கஷ்டங்களை ஓரளவுக்கு சமாளித்து அதை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வர முயற்சி செய்யக் கூடாது ? திருவாங்கூர்-கொச்சி ராஜ்யத்தில் மட்டுமல்ல, மேல் நாடுகளில் பார்த்தால் கூட இந்த நிலைமை நன்ருகத் தெரியும். உதாரணமாக இங்கிலாந்தைப் பார்த்தால், விவசாய துறையிலே ஈடுபட்டிருக்கிற விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்திருக்கிருர்கள். அங்கு சாத்தியமாயிருக்கும் போது ஏன் நம் நாட்டில் முடியாது. நான் ஒன்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நம் நாட்டிலே மக்களுடைய நேஷனல் கேரக்டர் என்று சொல்லுகிருர்களே—பொதுவான ஒரு தேசீய குணம்—அந்த குணம் மேல் நாட்டு மக்களுக்கு இருக்கிற அந்த அளவுக்கு இல்லை என்று................

THE HON. SRI R. VENKATARAMAN : நான் ஒரு நாளும் அந்த மாதிரி சொன்னது கிடையாது. நான் வெளி நாடுகளில் சுற்றிப் பார்த்த வரை நம் தேசிய குணம் மற்ற நாடுகளதை விட உயர்வாகத்தான் இருக்கிறது என்பதைப் பார்த்திருக்கிறேன்.

SRI M. JAGANNATHAN : அமைச்சர் அவர்கள் சொன்ஞர் என்று நான் எங்கே குறிப்பிட்டேன் ? நான் அப்படிச் சொல்லவேயில்லை. இதற்கு அமைச்சர் அவர்கள் குறுக்கிட்டுப் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். நான் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆகவே, மேல் நாடுகளில் இருக்கின்ற மக்களுக்கு உள்ள அந்த பொதுவான குணத்தை விட, நம் நாட்டு மக்களுக்குக் குறைவாக இருக்கின்ற காரணத்திஞல் இந்தக் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்த போதிலும் இங்கு இருக்கிற நிலச்சுவான்தார்களும், பெரிய மிராசுதார்களும், குறைந்த பட்ச கூலி நிர்ணயத்தை அமுல் செய்வதில் அவர்கள் அவ்வளவு நேர்மையாக நடந்துகொள்ளமாட்டார்கள். அதஞல்தான் இங்கு இருக்கிற விவசாயத் தொழிலாளர்களுக்கு பாதகம் ஏற்படும். அவர்களுக்கு பார்கெயினிங் கெபாஸிடி, ஆர்கனைஸிங் கெபாஸிடி, வருமையின் காரணத்திஞல் மிகக் குறைவாக இருக்கிறது. பல தொழிற் சங்கங்கள் ஏற்படுத்தி அவர்கள் உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ள அவர்களால் எந்த விதமான கிளர்ச்சியும், இயக்கமும் செய்ய முடியாமல் இருக்கிருர்கள். இந்தக் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் பொதுவாக நம் இந்தியா தேசத்திலே கடினமாக இருக்கிறது என்று கூறுகிருர்கள். இப்படிக் கடினமாக இருக்கக் கூடியது திருவாங்கூர்-கொச்சியில் சாத்தியமாயிருக்கிறது. மேலை நாடுகளில் சாத்தியமாயிருக்கிறது. ஆகவே, சர்க்கார் கடினமான பிரச்னை என்று தள்ளிவிடாமல் உடனடியாக அவர்களுடைய கவனத்தை இதில் செலுத்தி ஆவன செய்ய வேண்டும்.

மத்திய சர்க்கார், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே என்ன சொல்லுகிருர்கள். அவர்களும் இதை ஒத்துக்கொள்ளுகிருர்கள். குறைந்த பட்ச கூலி நிர்ணயம் கடினமான காரியம் என்று ஒத்துக் கொள்கிருர்கள். விவசாயத் தொழிலாளர்கள் மொத்த ஜனத் தொகையில் 55 சத விகிதத்திற்கும் மேலாக, விவசாயத் தொழிலையே நம்பி வாழ்ந்து வருகிருர்கள். அவர்களுடைய வறுமையைப் போக்க விரைவில் செய்ய முடியாமல் கடினமான பிரச்னையாக இருப்பதால் காலதாமதம் ஏற்பட்டாலும், இதை நாளடைவில் செய்யவேண்டுமென்பதை மத்திய சர்க்கார் உணர்ந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பட்டிருக்கிருர்கள். அவர்கள் சொல்வது, உடனடியாக இதைத் தீர்த்து வைக்க முடியாது. மக்களுடைய வறுமையைப் போக்க ஆல்டர்னேடிவ் எம்ப்ளாய்மெண்டு கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறேம். தகுந்த முறையில் வேறு துறைகளில் வேலை வாய்ப்பு கொடுக்கவேண்டுமென்று மத்திய சர்க்கார் சிபார்சு செய்திருக்கிருர்கள். இந்த வேலை வாய்ப்புக்கு நம் ராஜ்யத்தில் இருக்கிற சூழ்நிலையைச் சிந்தித்துப் பார்த்தால் மிக மிக மோசமாக இருக்கிறது. வேலை தேடித் தருவதற்கென்று ஜில்லா

தோறும் டிஸ்டிரிக்ட் எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸரைப் போட்டு வேலை தேடிக் கொடுக்கும் வேலையை கவனிக்க சர்க்கார் நியமனம் செய்திருக் கிறார்கள்.

இந்த வேலை தேடித் தரும் அலுவலகங்களின் மூலமாக மக்களுக்கு சரியான முறையில் வேலை கிடைக்கிறதா என்று பார்த்தால் இல்லவே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். படித்தவர்கள், பட்டம் பெற்ற வர்கள், தொழில் துறையில் பயிற்சி பெற்றவர்கள் இந்த வேலை தேடித் தரும் ஸ்தாபனங்களின் மூலமாக வேலை பெற முடிவதில்லை. இதற்குக் காரணம் என்னவென்றால், சர்க்காரின் கீழ் இருக்கும் பல இலாக்காக் களில் அவ்வப்பொழுது ஏற்படும் காலி ஸ்தானங்களை வேலை தேடித் தரும் ஸ்தாபனங்களுக்குத் தெரிவிப்பது கிடையாது. தயவு தாட்சண்யத்தினால் வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தைக் கேட்காமலே, தாங்களாகவே இந்த காலி ஸ்தானங்களுக்கு ஆட்களைத் தேர்ந்து அமர்த்தி விடுகிறார்கள். ஆகவே வேலை தேடித் தரும் ஸ்தாபனம் நல்ல முறையில் செயல் ஆற்ற முடிவ தில்லை. இதை அமைச்சர் அவர்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்பு கிறேன். ஏதோ பொதுவாக பேசுகிறேன் என்று அமைச்சர் அவர்கள் நினைக்கவேண்டாம்.

என்னுடைய ஜில்லாவான தென்னாற்காடு ஜில்லாவிற்கு வேலை தேடி தரும் ஸ்தாபனம் கடலூரில் இருக்கிறது. அங்கு இருக்கும் உத்தியோகஸ் தர் ஒரு அம்மையார். அந்த ஜில்லாவிலே இருக்கும் பல இலாக்காக்கள் காலி ஸ்தானங்களைப் பற்றிய தகவல்களைச் சரியாக தருவதில்லை என்று சொல்லுகிறார்கள். உதாரணமாக நெய்வேலியில், பழுப்பு நிலக் கரிச் சுரங்கத்தைச் சேர்ந்த ஆபீஸர்களில் பலவிதமான வேலைகளுக்கு ஸ்தானங்கள் காலியாக இருக்கின்றன. அங்கு இருக்கும் ஆபீஸர்களே ஆட்களை நியமித்து கொள்கிறார்களே தவிர வேலை தேடித் தரும் ஸ்தாபனத் திற்கு தகவல் தருவது கிடையாது என்று அந்த அம்மையார் பொது ஜனங்களின் பிரதிநிதியாகிய எங்களிடம் கூறுகிறார். ஆகையால் எல்லோ ருக்கும் வேலை வாய்ப்பு கொடுக்க வேண்டும் என்ற ரீதியில் இந்த ஸ்தாபனம் வேலை செய்வதற்கு சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சுட்டிக் காட்டி என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

10-43 a.m. **Sri N. MAHALINGAM** : கனம் சபா நாயகர் அவர்களே, அமைச்சர் கொண்டு வந்திருக்கக்கூடிய தொழிலாளர், பாக்டரி மான்யத்தை ஆதரிக்கும் முறையில் சில வார்த்தைகளை சொல்ல விரும்பு கிறேன். பக்கத்து ராஜ்யங்களில் இருக்கக்கூடிய நிலைமையை விட நமது ராஜ்யத்தில் தொழில் துறையில் அமைதியும், ஒத்துழைப்பும் இருந்து வருகிறது. நமது ராஜ்யம் தொழில் துறையில் முன்னேற்றம் அடைந்து வருகிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். பலர் நம்முடைய ராஜ்யத்தில் தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்று காத்துக்கொண்டிருக் கிறார்கள். நமது பக்கத்து ராஜ்யமான கேரளாவில் மின்சாரம் அதிகமாக இருந்த போதிலும் கூட அங்கே தொழில்களை ஆரம்பிக்காமல், சிறிது காலதாமதமானாலும் நம்முடைய ராஜ்யத்தில் தொழில்கள் ஆரம்பிக்க வேண்டும் என்று தொழில் அதிபர்கள் காத்துக்கொண்டிருப்பதற்கு இங்கு இருக்கும் தொழில் அமைதியே காரணம். இதை உணர்ந்துதான் பல தொழில் அதிபர்கள் பல புதிய தொழில்களை நம் ராஜ்யத்தில் ஆரம் பிக்க வேண்டும் என்று விரும்புகின்றனர். கனம் அங்கத்தினர் மாதா கௌண்டர் சொன்னது போல், ஒரு தொழிலுக்கு ஒரு தொழிற் சங்கம் இருக்க வேண்டும் என்ற யோசனையை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் அவர் சொல்லியது போல் இந்த தொழிற்சங்கங்கள் தொழில் நடத்துபவர்களின் தூண்டுதலால் ஏற்படுத்தப்படுகின்றன என்பதை நான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இந்த தொழிற் சங்கங் கள் பல அரசியல் கட்சிகளின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. ஒரு தொழிலு க்கு ஒவ்வொரு அரசியல் கட்சியும் ஒரு சங்கம் நடத்திக்கொண்டு வருகிறது. இந்த நிலைமை மாறி, ஒரு ஊருக்கு ஒரு தொழிற் சங்கம் என்பது மாறி, ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரே தொழிற்சங்கம் மாகாண வாரியாக இருக்கவேண்டும். இப்பொழுது பல சங்கங்கள் இருப்பதால், பல சிரமங்கள் ஏற்படுகின்றன.

25th March 1958] [Sri N. Mahalingam]

(Mr. Speaker in the Chair.)

நம் மாகாணத்தில் நூல் நூற்புத் தொழில் பெரிய தொழிலாக இருக்கிறது. இந்த தொழில் ஸ்தாபனத்தில் நூல் நூற்கும் பகுதியில் இருப்பவர்கள் ஒரு தொழிற் சங்கத்தின் கீழ் இருக்கிறார்கள். ரீலிங் பகுதியில் வேலை செய்யும் தொழிலாளர்கள் வேறு ஒரு சங்கத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். இப்படி பல சங்கங்கள் இருக்கின்றன. ஆகையால் ஒரு சங்கம் ஒத்துழைக்கும்போது மற்றொரு சங்கத்திலுள்ள தொழிலாளர்கள் ஒத்துழைக்க மறுக்கிறார்கள். ஆகையால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. ஆகையால் ஒரு தொழிலுக்கு ஒரு தொழிற் சங்கம் இருக்கவேண்டும். இதைப்பற்றி முன்பு தொழில் அமைச்சராக இருந்த ஸ்ரீ பக்தவச்சலம் ஒரு சட்டம் கொண்டுவரப்போவதாகக் குறிப்பிட்டார். கனம் அமைச்சர் அவர்கள் அதைச் சீக்கிரம் கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நம்முடைய ராஜ்யத்தில் நூற்புத் தொழில் மிகப் பெரிய தொழில். இப்போது இந்தத் தொழில் மிகவும் கஷ்டமான நிலையில் இருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் நம்முடைய மாகாணத்தில் இருக்கும் கைத்தறி துணிகள் அதிகமாக தேங்கி யிருக்கிறது. இது விற்கப்படாவிட்டால் மில்களில் உற்பத்தி பாதிக்கப்படும். இப்பொழுது இருக்கும் நிலைமை இன்னும் ஒரு மாதம் நீடித்தால் அநேக மில்கள் மூடக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும் என்று நான் அரசாங்கத்தை எச்சரிக்க விரும்புகிறேன்.

மதுரையில் இருக்கும் ஹார்வே மில்லில் 3-வது ஷிப்டை மூடி விட்டார்கள். கோயம்பத்தூரிலிருக்கும் மில்களிலும் அங்கு இருக்கும் மில் சங்கத்தின் தலைவர் ஜெனரேட்டர்களை வேலை செய்யாமல் இருக்கும்படி செய்ய வேண்டும் என்று அறிக்கை கொடுத்திருக்கிறார்கள். ஆகையால் இந்த நூற்புத் தொழிலில் அரசாங்கம் உடனடியாக கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மத்திய அரசாங்கம் போட்டிருக்கிற எக்சைஸ் வரி காம்போஸிட் மில்களுக்குத்தான் பிரயோசனமாக இருக்கிறதே தவிர மற்ற மில்களுக்கு இல்லை. ஆகையால் இந்த விஷயத்தில் மத்திய அரசாங்கத்திற்கு நம் சர்க்கார் எடுத்து உரைத்து தக்க நடவடிக்கை எடுப்பார்கள் என்று நினைக்கிறேன். அப்படிச் செய்யாவிட்டால், நம் மாகாணத்தில் இருக்கும் நூற்புத் தொழிலில் பெரும் குழப்பம் ஏற்பட்டு பல மில்களை மூட வேண்டிய நிலைமை ஏற்படும், தொழில் அமைதியின்மை ஏற்படும் என்று எச்சரிக்க விரும்புகிறேன்.

கோயம்பத்தூரில் 'Health Insurance Scheme' என்ற திட்டம் இருக்கிறது. இதிலே பல சிரமங்கள் இருக்கின்றன. டாக்டரிடம் போதுமான மருந்து இருப்பது இல்லை. டாக்டரிடம் சீட்டு வாங்கிக்கொண்டு மத்திய மருந்து கிடங்கிற்கு போக வேண்டிய நிலை இருக்கிறது. டாக்டர்கள் அதிகப்படியாக மருந்து ஸ்டாக் வைத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் மருந்து கிடங்குகள் அதிகமாக ஏற்படுத்தவேண்டும்.

டாக்டர்கள் சரியாக வேலை செய்கிறார்களா என்பது தணிக்கை செய்யப்படுவது இல்லை. சில டாக்டர்கள் தொழிலாளர்களுக்கு நோய் இல்லாவிட்டாலும் நோய் இருப்பதாகச் சொல்லி மாதக் கணக்கில் லீவு கொடுத்துவிடுகிறார்கள். அவர்களுக்கு என்ன நோய் என்று கேட்டால் அவர்கள் பதிலே அனுப்புவது இல்லை. இதனால் தொழிலாளர்கள் வேலை செய்யக் கூடிய நேரம் வீணாகப் போய்விடுகிறது. ஆகையால் டாக்டர்கள் சரியாக வேலை செய்கிறார்களா என்று பரிசோதிப்பதற்கு தணிக்கையாளர்கள் இருக்கவேண்டும்.

தொழில்துறையில் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்தால்தான் நம் தொழில்கள் எப்பொழுதுமே சீரான முறையில், லாபகரமானதாகவும் சௌகரியமாகவும் இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். டிரிபூனல்கள் "அவார்டுகளை"-க்கூட அமல் செய்யாமல் கோர்ட்டுகளுக்கு எடுத்துச் செல்லுகிறார்கள். கோர்ட் என்று சொன்னால் சுப்ரீம் கோர்ட்வரை செல்கிறார்கள். ஆகையால் இதில் தீர்வு காண காலதாமதம் ஆகிறது. தொழிலாளர்களுக்கும் திருப்தி ஏற்படுவதில்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கு அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்கும் என்று நினைக்கிறேன்.

[Sri N. Mahalingam] [25th March 1958

10-50 a.m. அதைப்போலவே தொழிலாளர்களுக்கும் பிரயோசனம் இல்லாமல் இருக்கிறது. அவார்டுகள் கொடுக்கக்கூடிய காலங்களில் அந்தந்த தொழிலைச் சார்ந்த நிபுணர்கள் இருந்தால் அவர்களுடைய யோசனைகளைக் கேட்டுக்கொண்டு அவார்டுகளைக் கொடுத்தால் அது ஒரு விதத்தில் நன்மையாக இருக்கும். அந்தந்த தொழிலுக்கு எந்த அளவுக்கு அவர்கள் ஆலோசனைகளைக் கொடுக்க முடியும் என்பது கண்கூடாகத் தெரியும். இந்தியா பூராவும் உள்ள பத்திரிகையாளர்களுக்கு சம்பளம் சம்பந்தமாக ஒரு சட்டம் வந்தது. அது சரியல்ல என்று கூட சமீபத்தில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு கொடுத்திருக்கிறது. இம்மாதிரியான நிலைமைக்கு வரக்கூடாது. அந்த அளவில் அவார்டுகளைச் செய்யும்போது அந்த தொழிலினுடைய நிபுணர்களையும் அதில் சேர்த்துக்கொண்டு அவர்களுடைய ஆலோசனையைக் கேட்டுக்கொண்டு அவார்டுகளை கொடுத்தால் அது நல்ல முறையில் பயன் படும். பல ட்ரிபூனல்கள் அவார்டுகள் கொடுத்தாலும் அது சரியானபடி அமுல் செய்யப்படாமல் தொழிலை நடத்துகிறவர்களும், தொழிலாளர்களும் ஒரு உடன்பாட்டுக்கு வந்து அவார்டு சம்பந்தப்பட்ட தீர்ப்புப்படி இல்லாமல் தாமாகவே ஒரு முடிவுக்கு வந்து அதன்படி செய்து கொள்கிறார்கள். அதனால் அவார்டுக்கு மதிப்பு இல்லாமல் போய்விடுகிறது. இப்படிப்பட்ட நிலைமை வராமல் இருப்பதற்கு அந்தந்த தொழில் நிபுணர்களையும் அந்த ட்ரிபூனலில் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி கோயம்பத்தூரில் இன்ஜினியரிங் தொழில் சம்பந்தமாக ட்ரிபூனல் அவார்டு கொடுத்திருந்தும் அதை ஏற்றுக்கொள்ளாமல் தொழிலை நடத் துகிறவர்களும், தொழிலாளிகளும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்து அதன் படி நடந்துகொண்டு வருகிறார்கள். அவர்களே கூலி நிர்ணயம் செய்து கொண்டு சம்பளத்தை நிர்ணயம் செய்துகொண்டு செயல்பட்டு வருகிறார்கள். ட்ரிபூனல் கொடுக்கும் அவார்டுகள் சில சமயங்களில் செயல்படாமல் போய்விடுகிறது. ஆகவே அந்தத் தொழில் நிபுணர்கள் அதில் இருந்திருந் தால் இப்படிப்பட்ட நிலைமை ஏற்படாது. அதைப்போலவே பொருள்களை உபயோகப்படுத்துகிறவர்களுடைய யோசனையையும் கேட்டு பொருள்களின் விலைகளை நிர்ணயம் செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. பொருள் களின் விலையை நிர்ணயம் செய்யும்போது அதை உபயோகப்படுத்தக்கூடிய பிரதிநிதிகளையும் ஆலோசனை கேட்டு அதன் பிறகு விலையை நிர்ணயம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அமெரிக்காவில் அதைப் போன்றதான் கமிட்டி இருக்கிறது. அங்கு கன்ஸல்ட்டண்ட் கமிட்டி என்று ஒரு கமிட்டியை ஏற்படுத்தி அதன் மூலமாக விலைகளை நிர்ணயம் செய்து வருகிறார்கள். அந்தக் கமிட்டியில் பொருள்களை உபயோகப்படுத்துகிறவர் களையும் அவர்களுடைய பிரதிநிதிகளையும் சேர்த்துக்கொண்டு அவர் களுடைய ஆலோசனைகளைக் கேட்டு விலைகளையும் கூலியையும் நிர்ணயம் செய்கிறார்கள். அதே மாதிரி இங்கேயும் நாம் ஒரு கமிட்டியை நியமித்து அதன்படி விலையையும் கூலியையும் நிர்ணயம் செய்யலாம். இப்படி அவர்களைச் சேர்த்துக்கொண்டால் சரியான முடிவுக்கு வருவதற்கு சௌ கர்யமாக இருக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தப்படியாக என்னுடைய தொகுதியாகிய ஆனைமலை தேயிலைத் தோட்டப் பிராந்தியங்களில் அநேகம் வீடுகள் கட்டவேண்டியது பாக்கியாக இருக்கிறது. அரசாங்கம் நடத்துகிற தொழில் சம்பந்தப்பட்டவர்கள் சில வருஷங்களாக வீடுகள் கட்டுவதை மிகவும் குறைந்த வேகத்தில் செய்து கொண்டு வருகிறார்கள். அதன் காரணமாக அங்குள்ள தொழிலாளர்கள் போதுமான வசதி இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். புதிய சட்டமாகிய ப்ளான்டேஷன் லேபர் ஆக்டின் பிரகாரம் வீடுகள் கட்டிக் கொடுப்பது அந்தத் தொழிலை நடத்துகிறவர்களுடைய கடமையாக பாவிக் கப் பட்டிருக்கிறது. ஆனால் இப்பொழுது வேகமாக அப்படி வீடுகளை கட்டி கொடுப்பதாக இல்லை. அந்த தோட்டத் தொழில்களை நடத்துகிறவர்களுக்கு அரசாங்கம் கடன் கொடுத்தாவது உதவி செய்து தொழிலாளர்களுக்கு வீடு களைக் கட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். அங்குள்ள தொழிலாளர்களுக்கும் சீக்கிரமாகவே வீடுகளைக் கட் டிக்கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நானே சில மந்திரிகளை நேரில் அந்தப் பிரதேசங்களுக்குக் கூட்டிக்கொண்டு போய் அவர்கள் வசிக்கக்கூடிய வீடுகளை காட்டியிருக்கிறேன். இப்பொழு துள்ள ரெவினியு மந்திரி அவர்களும் அந்த வீடுகளை நேரில் வந்து

25th March 1958] [Sri N. Mahalingam]

பார்த்திருக்கிறார். தற்போது சபாநாயகராக இருக்கும் டாக்டர் கிருஷ்ண ராவ் அவர்கள் சென்ற மந்திரி சபையில் தொழில் மந்திரியாக இருந்தபோது அவர்களையும் அங்கு கூட்டிக்கொண்டு போய் அங்குள்ள தொழிலாளர்கள் வசிக்கக்கூடிய வீடுகளைக் காட்டியிருக்கிறேன். 8 அடிக்கு 6 அடி உள்ள அறையில் ஒரு குடும்பம் வசிப்பதையும் 12-க்கு 10 அடியுள்ள அறையில் மூன்று குடும்பங்கள் வசித்து வருவதையும் அவர்கள் நேரில் பார்வை யிட்டிருக்கிறார்கள். அநேக தோட்டங்களில் இப்படிப்பட்ட நிலைமை இருக் கிறது. ஆகவே தொழிலாளர்களுக்கு வீடுகளை கட்டிக்கொடுப்பதற்கு சீக்கி ரத்தில் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மேலும் அங்கேயுள்ள தொழிலாளர்களுடைய குழந்தைகளுக்கு சரியான படி படிப்பு வசதி இல்லாமல் இருக்கிறார்கள். பத்தாவது வரையில் படித் தவர்களுக்கு அங்கேயே உத்யோகங்கள் கிடைப்பதாக இல்லை. அதனால் பல தொழிலாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். அங்குள்ள உயர்தரப் பள்ளிகளில் படித்துவிட்டு தேர்ச்சி பெற்ற குழந்தைகள் இருந்தால் அவர்களுக்கு அங் கேயே உத்யோகங்களைக் கொடுத்து வந்தால் நன்மையாக இருக்கும். ஆனால் இப்பொழுதுள்ள நிலைமையைப் பார்த்தால் அப்படி உத்யோகங்கள் கொடுப் பதாக இல்லை. தோட்டங்களில் குமஸ்தா வேலையோ அல்லது மற்றும் அதைப் போன்று வேறு எந்த வேலைகளாக இருந்தாலும் அவைகளை தோட்டத் தொழிலாளர்களுடைய குழந்தைகளுக்கே கொடுக்கவேண்டும் என்று அரசாங்கம் நிர்ணயம்செய்யவேண்டும். அதற்கு வேண்டிய சட்டங்களை செய்ய முடியாவிட்டாலும் அங்குள்ள நிர்வாகஸ்தர்களைக் கண்டு இப்படி தொழிலாளர் களுடைய குழந்தைகளுக்கு உபயோகங்களைக் கொடுக்கவேண்டும் என்று சிபாரிசு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிக் கொடுத்தால்தான் அங்குள்ள தொழிலாளிகள் நல்ல முறையில் இருக்க முடியும்.

அடுத்தபடியாக போனஸ் சம்பந்தமாக சிலவற்றைச் சொல்ல வேண்டி யதாக இருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு தொழில் சம்பந்த மாக போனஸ் வழங்கப்பட்டு வருகிறது. அது சம்பந்தமாக அடிக்கடி ட்ரிபூனலுக்கு போய்க்கொண்டே இருக்கிறது. கனம் மாதா கௌடர் பேசும் போது தொழிலை நடத்துகிறவர்களுக்கு லாபம் இருந்தாலும் சரி இல்லா விட்டாலும் சரி தொழிலாளர்களுக்கு போனஸ் கொடுக்கவேண்டும் என்று சொன்னார். அப்படிச் சொல்வது சரியல்ல. அது கொள்கை அளவில் சரியாக இருக்காது. அது நடைமுறையில் அமுலுக்கு வர முடியாது. ஒவ்வொரு தொழிலிலும் இப்படி போனஸ் கொடுக்கப்படவேண்டும் என்றும், இரண்டு அல்லது மூன்று வருஷங்களுக்கு அதிகமாக இருக்கக் கூடிய நாட்களில் நிச்சயமாக வேலை செய்தால் போனஸ் கிடைக்கும் அளவில் முடிவு செய்யவேண்டும். அப்பொழுதுதான் சரியானபடி அமைதியாக இருக்கும். எவ்வளவு லாபம் என்று கணக்கு எடுத்து அந்த அளவில் மூன்று வருஷங்களுக்குள்ள லாபத்தை கண்டுபிடித்து போனஸ் கொடுக் கலாம். அதன்படி முடிவு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த இலாகா நல்ல முறையில் வேலை செய்துகொண்டு வருகிறது என் பதைச் சொல்லிக் கொண்டு இந்த மானியத்தை நான் ஆதரிக்கிறேன்.

**Sri T. P. ELUMALAI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சபையின் முன்வைத்திருக்கிற தொழில மானியக் கோரிக்கையை ஆதரித்துப் பேசும்போது இந்த மானியத்துக்கு ஆதரவாக இருக்கிற கனம் மந்திரி அவர் கள் மீண்டும் மேல் சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு வந்ததற்கு தொழிலாளர் களுடைய சார்பாக அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். உண்மையிலேயே பத்து வருஷங்களுக்குப் பிறகு இன் றைக்கு தொழிலாளர்களுடைய நிலைமை சிறந்த முறையில் இருக்கிறது என்று சொல்லலாம். சிறந்த முறையில் என்று சொன்னால் மானத்தை பாதுகாத்து மானத்தோடு வாழ்ந்து தன் வாழ்க்கையைச் சரியான முறையில் நடத்தி வருகிறார்கள். நல்ல மானத்தோடு தொழிலாளர்கள் வாழ்கிறார் கள் என்று எல்லோரும் ஒப்புகின்ற அளவில் அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள் இப்படிப்பட்ட ஒரு நிலையை நான் தொழிலாளர்களுடைய மத்தியில் பார்க்கிறேன். தொழிலாளர்களும் அப்படிப்பட்ட ஒரு நிலைமையைப்

பெற்றுப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் நான் தெரிவிக்கபிரியப்படுகிறேன். மானம் இல்லாமல் ஒருவன் வாழ்ந்து வந்தால் இந்த சுதந்திர நாட்டில் எவ்வளவுதான் சௌகர்யத்துடன் வாழ்ந்தாலும் அவனை மதிக்கமாட்டார்கள். ஆனால அந்த உரிமையைப் பெற்று இன்றைக்கு தொழிலாளர்கள் மானத்தோடு வாழ்ந்து வருகிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். இன்றைக்கு தொழிலாளர்களுடைய பொருளாதார நிலைமை உயர்ந்து இருக்கிறது. இதை நான் இந்தச் சட்டசபையில் சொல்லிக்கொள்ள பிரியப்படுகிறேன். இந்த இலாகாவில் இருக்கிற அதிகாரிகளும் மந்திரிகளும் யாராக இருந்தாலும் அவர்கள் இலாக்காவைப் பற்றி அறிந்தவர்களாக இருக்கவேண்டும். ஒவ்வொரு இலாக்காவிலும் உள்ள அதிகாரிகளையும் மந்திரிகளையும் யார் யாரோ என்பதையும் எல்லோரும் அறிந்து கொள்ளவேண்டும். இதற்கு முன்னதாக இந்த சபையில் பேசப்பட்டது பூர்வீகத்தைப்பற்றி, அந்த பூர்வீக சரித்திரத்தை எடுத்துப் பார்த்தால் இது நன்றாகத் தெரிய வரும், மேலும் பத்து ஆண்டுகளுக்கு முன் இருந்தவர்கள்பேரில் நம்பிக்கையும் அவநம்பிக்கையும் ஏற்பட்டிருந்தது. அந்த முறையில் அவர்கள் இருந்தார்கள். இப்பொழுதுள்ள அதிகாரிகளையும் மந்திரிகளையும் பார்க்கும்போது இந்த இலாகாவைப்பற்றி நன்றாக அறிந்தவர்களும் இந்த இலாகாவில் நீண்ட நாட்களாக அனுபவம் உள்ளவர்களும்தான் இருக்கிறார்கள். அந்த இலாகாவில் இருந்து தொண்டாற்றியவர் இன்று அந்த இலாகாவின் சர்க்கார் மந்திரியாக இருக்கிறார். ஆனால் இதற்கு முன் இருந்தவர்கள் அந்த இலாகாவைப்பற்றியே தெரியாதவர்களாக இருந்தார்கள். இப்பொழுது இந்த இலாகாவைப்பற்றி தெரிந்து கொண்டவர்கள் இருப்பதைப் பார்த்து நாம் பெருமை கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இதற்கு முன்னதாக இந்த இலாகாவில் ஒன்றும் அறியாதவரையும் அந்த இலாகா சம்பந்தம் இல்லாதவரையும் போட்டிருந்தார்கள். அதனால் தொழிலாளர்கள் சொல்வது அவர்களுக்குப் புரியாமலும், அவர்கள் சொல்வது தொழிலாளர்களுக்குப் புரியாமலும் இருந்தது. இதனால் தொழிலாளர்களுக்குப் பெரிய கஷ்டமாக இருந்தது. அப்படிப்பட்ட ஒரு நிலைமை அந்தக் காலத்தில் இருந்தது. ஆனால் இப்பொழுது அப்படிப்பட்ட நிலைமை இல்லை. இப்பொழுதுள்ள மந்திரிக்கு முன்னால் இருந்த மந்திரி சபையில் கனம் பக்தவத்சலம் அவர்கள் தொழிலாளர்களுக்கு இருந்த தீமையை போக்கினார்கள். அப்பொழுதுள்ள சூழ்நிலையை மாற்றி தக்க சூழ்நிலைக்குக் கொண்டுவந்தார்கள். அதன் பிறகு அது சாசுவதமாக இருப்பதற்கும் தற்போது உள்ள மந்திரி தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒரு நல்ல சூழ்நிலையை ஊக்குவிப்பதற்கும் நம்முடைய நண்பர் தொழில் அமைச்சர் கனம் வெங்கட்டராமன் அவர்களை இப்பொழுது அந்த இலாக்காவிற்கு பொறுப்பாளியாக போட்டிருக்கிறார்கள். இது ஒரு அளவிற்கு வரவேற்கத்தக்கதாக இருக்கிறது பெருமைப்படக்கூடியதாகவும் இருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்ள பிரியப்படுகிறேன்.

இந்த இலாகா எவ்வளவோ நல்ல முறையில் மாறுதல் அடைந்திருந்தாலும் அதில் சில குறைகள் இருக்கத்தான் செய்கிறது. தொழிற்சாலைகளில் இன்றைக்கு எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. தொழிற்சாலைகளில் இருக்கிற அதிகாரிகள் தொழிலாளர்களை வேறுவிதமாக நடத்தினாலும் அல்லது அவர்களுக்கு எந்த வகையிலாவது இடைஞ்சல் செய்தாலும், தொழிலாளர்கள் அவர்களை கொடும்பாவி கட்டி இழுக்கக்கூடிய அளவில் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு உரிமை தொழிலாளர்களுக்கு இப்பொழுது வந்திருக்கிறது. என்னுடைய தொகுதியில் கூட இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. தங்களுக்கு விரோதமாக இருக்கக்கூடிய முதலாளிகளின்பேரில் தொழிலாளர்கள் பகிரங்கமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறார்கள். முதலாளிகளின் மீது தொழிலாளர்கள் பழி வாங்கக்கூடிய அளவில் அவர்கள் உரிமை பெற்றிருக்கிறார்கள் என்பதை இங்கே சொல்லிக்கொள்ள பிரியப்படுகிறேன். ஆனால் இதற்கு பல தொழிற் சங்கங்கள் தடையாக இருக்கின்றன. உதாரணமாக அந்தந்த சங்கத் தலைவர்கள் தங்களுடைய கட்சியின் கொள்கைக்கு சாதகமாகவும் தங்களுடைய கட்சியின் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்வதற்கும் அவர்கள் முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறார்கள். இந்த சந்தர்ப்

25th March 1958] [Si T. P. Elumalai]

பத்தில்தான் தொழிலாளர்களுடைய உண்மையான உரிமை பரிபோகிறது. அதற்காக சர்க்கார் தக்க சட்டங்களைக் கொண்டு வரவேண்டும். சில சட்டங்களையும் இப்பொழுது கொண்டு வந்திருக்கிறார்கள். சர்க்கார் கொண்டுவரும் சட்டங்களை தொழிற்சங்கத் தலைவர்கள் ஆதரிக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். அதன் மூலமாக தொழிலாளர்களுடைய முன்னேற்றத்துக்கு பாடுபட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யவேண்டியது அவசியம். ஓரளவு உரிமையோடு இருப்பவர்கள் அதை ஒட்டி கேட்பதற்கு அதிகாரம் பெற்றவர்களைவிட, தாழ்மையான நிலைமையில் இருக்கும் தொழிலாளிகளுக்கு கூலி நிர்ணயம் செய்ய ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று சர்க்காரை கேட்டுக்கொள்ளுகிறேன். குறிப்பாக, உப்பு உற்பத்தி செய்யும் தொழிலாளர்கள் படும் கஷ்டம் கொஞ்சம் நஞ்சம் அல்ல. அது மட்டுமல்ல. விவசாயத் தொழிலாளர்கள், தோல் பதனிடும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகள், கட்டிடங்கள் கட்டுவதில் ஈடுபட்டிருக்கும் தினக்கூலி என்று சொல்லப்படும் தொழிலாளிகள் ஆகியோர்களுக்கு கூலி நிர்ணயம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். கண்டிராக்டர்கள் லட்சக்கணக்கில் பெரிய கட்டிடங்களையெல்லாம் கட்டுவதற்கு கண்டிராக்ட் எடுத்துவிட்டு தினக்கூலி ஆட்களை வைத்துக்கொண்டு கட்டிட வேலையையே முடித்துவிடுகிறார்கள். அந்தத் தினக்கூலிகள் படும் கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. அவர்கள் சிமெண்டு கூட்டுவதற்காக காலில் காகிதத்தையோ கந்தத்துணியையே கட்டிக்கொண்டு வேலை செய்வது மிகவும் பரிதாபகரமாக இருக்கிறது. நான் நேற்றுகூட ½ மணி நேரம் நின்று இதை கவனித்தேன். அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்யவேண்டியிருக்கிறது. அவர்களுடைய கூலியை நிர்ணயம் செய்தால்தான் அவர்களுக்குதகுந்த பாதுகாப்பு கிடைக்கும். ஆகவே, இம்மாதிரியான தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். உண்மையிலேயே அமைச்சர் அவர்களுக்கு இது நன்றாகத் தெரியும். ஏதோ நான் புதியதாகச் சொல்லுவதாக நினைக்கவேண்டாம். ஆனால், உடனடியாக அந்தத் தொழிலாளர்களுக்கு கூலியை நிர்ணயம் செய்து பாதுகாப்பு ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுவதற்காகத்தான் இது பற்றி குறிப்பிட்டேன். 11-00 a.m.

அது மாத்திரமல்ல. சென்னையில் வால் டாக்ஸ் ரோடில் பல பட்டரைகள் இருக்கின்றன. அவைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் படும் கஷ்டத்தை சட்டசபை மெம்பர்கள் எல்லோரும் பார்த்திருக்கலாம். அவர்களுக்கு எந்த விதமான வசதியும் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். கிண்டியில் தொழில் அரங்கு ஏற்படும்பொழுது அதில் இந்த பட்டரைகளுக்கெல்லாம் இடம் கொடுத்து அங்கே இவைகளை மாற்றவேண்டுமென்று நினைத்தார்கள் என்று நான் எண்ணினேன். ஆனால் ஒரே ஒரு பட்டரைதான் அங்கே போயிருக்கிறது என்று விசாரித்ததில் தெரியவருகிறது. அவைகளையெல்லாம் சரியான வசதியோடு கூடிய தொழிற்சாலைகளாக மாற்ற வேண்டும். அந்தத் தொழிலாளர்கள் நல்ல வசதியான முறையிலே உட்கார்ந்து வேலை செய்வதற்கு வகை செய்யவேண்டுமென்று நம்முடைய சர்க்காரை பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

திருவொற்றியூரில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு கிண்டியில் வீடு கட்டிக்கொடுத்து பிரயோசனம் இல்லை. இதனால் தினந்தோறும் தொழிலாளிகள் போக்குவரத்துக்கும் படும் கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆகவே, எங்கு தொழிற்சாலைகள் அதிகமாக இருக்கிறதோ, அங்கெல்லாம் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு சர்க்கார் முன்வரவேண்டும். ஓரளவுக்கு இதைச் செய்திருக்கிறார்கள். ஆனால் தொழில் அரங்கு என்று சொல்லக்கூடிய நிலையில் திருவொற்றியூரில் பல தொழிற்சாலைகள் இருக்கின்றன. அங்கு இருக்கும் தொழிலாளர்களுக்கு பக்கத்திலேயே வீடு கட்டிக்கொடுக்கவேண்டும். அதற்கு வேண்டிய இட வசதியும் அங்கேயே இருக்கிறது. இதில் அமைச்சர் அவர்கள் அக்கரை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் அவர்களை மிகப் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Si T. P. Elumalai] [25th March 1958

உண்மையிலேயே தொழிலாளர்கள் ஓரளவுக்கு முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். லேபர் கமிஷனர் கூட இங்கே வந்திருக்கிறார்கள். தொழிலாளர் தலைவர்கள் வந்தாலும் சரி, சாதாரண தொழிலாளி வந்தாலும் சரி, அவர்களுக்கு சொல்லவேண்டிய விஷயங்களையெல்லாம் சொல்லி, சட்ட விஷயத்தையும் விளக்கி, இப்படியெல்லாம் நீங்கள் போராடவேண்டுமென்று சொல்லி அவர் ஒரு தொழிற் சங்க தலைவர்போல் இருந்து பணியாற்றுகிறார். இது பொதுவாக தொழிலாளர்களுடைய நிலைமையை கண்காணித்துவரும் தலைவர்களுக்கு நன்றாகத் தெரியும். உண்மையிலேயே அமைச்சர் அவர்களுக்கும், லேபர் கமிஷனர் அவர்களுக்கும், முதலாளிகள் எந்தக் கண்ணோட்டத்தோடு பார்க்கிறார்கள் என்பது தெரியும். இந்த நிலைமை தொழிலாளர்களின் அரங்கில் வேலை செய்கின்ற தலைவர்களுக்கும் நன்றாகத் தெரியும். ஆகையால் நாம் எல்லோரும் அவர்களுக்கு நன்றி செலுத்தி சட்டங்களுக்கு உதவியாக இருக்கவேண்டும். அவர்கள் போடுகின்ற சட்டத்திலே ஏதாவது ஓட்டைகள் இருந்தாலும், நிர்வாகத்திலே ஒரு சில குறைகள் இருந்தாலும், அவற்றை சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்லி நல்ல எண்ணத்தை நிலைநிறுத்துவதற்காக தொழிற் சங்கத் தலைவர்கள் உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு முன்னாலே தொழில் மான்யத்திலே பேசுவதற்கு நான் வாய்ப்பு பெற்றிருந்தேன். சென்ற சட்டசபையில் தொழில் மான்யத்தில் நான் பேசியிருக்கிறேன். தொழில் மான்யம் என்றால் ஒரு சுருசுருப்பு காணப்படும். என்னென்னவோ கேள்விகளெல்லாம் எழும். ஆனால் இப்பொழுது விவாதம் உப்பு சப்பு இல்லாமல் இருக்கிறது. (சோத்துக்கு உப்பு இல்லை என்றால் பிரயோசனப்படாது). அதுபோல் உப்பு இல்லாத சோறு மாதிரி விவாதம் சப்பு என்று இருக்கிறது. தொழிலாளர்கள் மத்தியில் வேலை செய்கின்றவர்கள், தொழிலாளர்கள் இடத்திலே அதிக அக்கரை உள்ளவர்கள் ரொம்ப குறைவாக இருக்கிறார்கள் என்பதைத்தான் இது எடுத்துக்காட்டுகிறது. புதிதாக திராவிட முன்னேற்ற கழகத்தினர் ஓரளவுக்கு இந்த முகாமிலே புகுந்திருக்கிறார்கள். அதில் வேலை செய்வதற்கு முன்வருவதற்கு ஆசையோடு இருக்கிறார்கள். இந்த ஆண்டில் இதற்கு அவர்களுக்கு ஒரு வாய்ப்பு ஏற்படும் என்று நினைக்கிறேன். தொழில் சங்கங்களுடைய நிலைமையை உணர்ந்து அவைகளுடைய சரித்திரத்தை அறிந்து, தொழிலாளர்களுடைய குறைகளை அறிந்து, அதிலே ஈடுபடுகிற முறையில்தான் மறு ஆண்டிலே கூட இந்த மான்ய விவாதத்தின் போது ஒரு சுருசுருப்பு ஏற்படும் என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். என் நன்றியை சொல்லி இத்துடன் என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, போன மந்திரி சபையில் இருந்ததைவிட உண்மையாகவே லேபர் டிபார்ட்மெண்டு இப்பொழுது திறமையாக வேலை செய்கிறது என்பதை இப்பொழுது இருக்கக்கூடிய சுமுகமான நிலைமை எடுத்துக்காட்டுகிறது. இப்பொழுது அதிகப்படியான தகராறுகள் இல்லாமல், சீக்கிரம் எல்லா தகராறுகளும் "ரெபரென்ஸ்" செய்யப்படுகிறது. அதுமட்டுமல்ல, நமது தொழில் அமைச்சர் அதிக திறமையுடன் தொழிற் சங்கங்களை நடத்தியவர். ஆகவேதான் பீடி தொழிலாளர்கள் சட்டம், ஹோட்டல் தொழிலாளர்கள் சட்டம், தொழிலாளர்களுக்கு தேசீய நாட்களுக்கு லீவு கொடுக்கக்கூடிய சட்டம் போன்ற சட்டங்களையெல்லாம் கொண்டுவருவதற்கு அவர்கள் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரியான சட்டங்கள் பல நல்ல அம்சங்களோடு கூடியவை.

கோயம்புத்தூர் போன்ற இடத்திலே பனியன் தொழிற்சாலைகள் அதிகமாக இருக்கின்றன. அநேக "ஜின்னிங் பாக்டரிகள்" அங்கே இருக்கின்றன. லட்சக்கணக்கான தொழிலாளர்கள் அங்கே வேலை செய்கிறார்கள். அங்கே ஒரு லேபர் ஆபீஸர்தான் இருக்கிறார். ஆகவே, கோயம்புத்தூரில் அதிகப்படியாக ஒரு லேபர் ஆபீஸர் போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதுமட்டுமல்ல. அங்கு இருக்கக்கூடிய லேபர் ஆபீஸருக்கு மேஜை நாற்காலி கூட கிடையாது. ஒரு சிறிய கமிட்டி கூட்டம் நடத்தவேண்டுமென்றால்கூட பக்கத்தில் இருக்கும் முதலாளிகள் சங்கத்திலே

25th March 1958] [Sri N. K. Palanisami]

ருந்து மேஜை. நாற்காலிகள் வாங்கிக்கொண்டு வரக்கூடிய நிலைமையில் இருக்கிறது. இதனால் தொழில் உறவு எந்த அளவுக்கு இருக்கும் என்பது நன்றாகத் தெரியும். இப்படிப்பட்ட நிலைமையை மாற்றுவதற்குவேண்டிய நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்கவேண்டும்.

நம் தேசத்தில் பார்க்கிறோம், உற்பத்தி அதிகரித்துக்கொண்டே போகிறது. சர்க்கார் கணக்குப்படியே உற்பத்தி 20 சத விகிதத்திலிருந்து 25 சத வீகிதமாக உயர்ந்திருக்கிறது. முதலாளிகளுக்கு லாபம் அதிகப்படியாக குறையவில்லை. லாபம் வந்துகொண்டுதான் இருக்கிறது என்று சர்க்கார் அறிக்கையிலேயே கூறப்பட்டிருக்கிறது. 1955-ம் ஆண்டில் 5,000 பாக்டரிகளில் 321,000 பேர்கள் வேலைசெய்திருக்கிறார்கள். 1957-ல் 293,000 பேர்கள் வேலை செய்திருக்கிறார்கள். ஆகவே, கிட்டதட்ட 28,000, 30,000 பேர்கள் ரிட்ரென்ச் செய்யப்பட்டிருக்கிறார்கள், இப்படி ரிட்ரென்ச் செய்யப்பட்டிருக்கிறவர்களுக்கு வேலை கொடுப்பதற்கோ, அல்லது வேறு தொழில்களை ஆரம்பிப்பதற்கோ சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றுதான் நான் கேட்கிறேன். மதுரை ஹார்வி மில்லுக்கு 1955-ல் வந்த லாபம் ரூ. 1 கோடி 14 லட்சம். 1956-ல் ரூ. 96½ லட்சம் தான் லாபம் வந்திருக்கிறது. அவர்கள் என்ன செய்திருக்கிறார்கள் என்று பார்த்தால், 26 நாட்களுக்கு மில்லை மூடிவிட்டார்கள். சரக்கு விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கிறது என்ற காரணத்தைக் காட்டி 26 நாட்களுக்கு மில்லை மூடிவிட்டார்கள். அதே மாதிரி மதுரை மில்லில் 1955–56-ல் ரூ. 15½ கோடிக்கு விற்பனையாகி இருக்கிறது. ஒரு கோடி ரூபாய்க்கு மேல் லாபம் கிடைத்திருக்கிறது. 1957-ல் ரூ. 14 கோடி 84 லட்சத்திற்கு விற்பனையாகி இருக்கிறது. ரூ. 62 லட்ச ரூபாய் லாபம் கிடைத்திருக்கிறது. ஆனால், சரக்கு விற்பனையாகவில்லை, தேங்கி கிடக்கிறது என்று சொல்லி மில்லை 46 நாட்களுக்கு மூடிவிட்டார்கள். சமீபத்தில் டீசல் எண்ணெய்க்கு வரி போட்டதின் காரணமாக, அதனால் உற்பத்திச் செலவு அதிகமாகும் என்று சொல்லி டீசல் எண்ணெயில் ஓடக்கூடிய அநேக என்ஜின்களை மூடக்கூடிய ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது. ஏதாவது கொஞ்சம் சாக்கு கிடைத்தால் போதும், அதை வைத்துக்கொண்டு முதலாளிகள் தொழிலாளிகளின் மீது தாக்குவதற்கு தயாராக இருக்கிறார்கள் என்பதுதான் நமக்கு நன்றாகத் தெரிகிறது. மதுரையில் இன்னும் பல இடங்களில் இத்தகைய நிலைமை இருக்கிறது. மகா கணபதி மில் மூடப்பட்டிருக்கிறது. பொள்ளாச்சியில் பாக்கியலக்ஷ்மி மில் மூடப்பட்டிருக்கிறது. ஸ்ரீவில்லிபுத்தூர் மில் மூடப்படும் தருவாயில் இருக்கிறது. அவர்களுக்கு லாபம் குறைந்திருக்கலாம். துணித் தேக்கமும் அதிகரித்திருக்கலாம். அதற்காக பல ஷிப்டுகளை பல மில்காரர்கள் நிறுத்தியிருப்பது சரியல்ல. அவ்வாறு செய்தவர்கள் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ? துணிகள் மில்களிலேயே தங்கிக்கிடப்பதற்கு நிவாரணம் கொடுப்பதற்காக மத்திய அரசாங்கத்தார் 15 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். இதன் விளைவாக துணித் தேக்கம் ஓரளவு குறையும். தென்னிந்தியாவிலுள்ள மில்கள் எல்லாம் நூற்பு மில்கள். இந்த நிலைமையில் இந்த 15 கோடி ரூபாயினால் நம் ராஜ்யம் போதிய பயனடைய முடியாது. இங்கே நூற்பு மில்கள் அதிகமாக இருப்பதால்தான் துணிகளுக்கு விதி விலக்கு அளித்திருக்கிறார்கள். நடுத்தர ரகத் துணிக்கு இந்த வரியில் 1/3 பங்கும் மோட்டா ரகத் துணிகளுக்கு ¼ பங்கும் குறைகிறது. எனவே துணிகள் மிகவும் மலிவான விலைக்கு விற்கப்படலாம். இந்த நிலைமையில் பல கோடி ரூபாய் பெறுமான கைத்துறித் துணிகள் தேங்கிவிடும் என்று சொல்லிக்கொள்கிறேன். ஏற்கெனவே 2 கோடி ரூபாய் பெருமான கைத்தறித் துணிகள் தேங்கியிருக்கின்றன. அது இன்னும் அதிகமாகும். இதற்கு சரியான பரிகாரம் காணவேண்டுமானால் ரிபேட் தொகையை உயர்த்தவேண்டுமென்று மத்திய சர்க்காரை ராஜ்ய சர்க்கார் நிர்ப்பந்திக்கவேண்டும். 11–10 p.m

அடுத்தபடியாக, மின்சார வெட்டு வரப்போகிறது. இங்கே இருக்கும் டீசல் எஞ்ஜின்களை எடுத்துவிடப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அவைகளை கண்டிப்பாக எடுக்கக்கூடாது என்று சர்க்கார் கட்டளையிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கோயம்புத்தூரில் கிட்டத்தட்ட 18 மில்கள் இருக்கின்றன. அந்த மில்களுக்கு சர்க்கார் வரிச் சலுகைகள் கொடுத்

[Sri N. K. Palanisamy] [25th March 1958

திருக்கிறார்கள். அந்த மில் முதலாளிகள் அரசியல் சட்டத்திற்கு மாறாக, பெண்களை மில்லில் வேலைக்கு அமர்த்திக்கொள்ள மறுக்கிறார்கள். இது சம்பந்தமாக 1958-ம் ஆண்டு நவம்பர் மீ 21-ந்தேதியன்று கனம் மந்திரியிடம் "ரெப்ரெஸென்டேஷன்" தரப்பட்டிருக்கிறது. சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை.

அடுத்தபடியாக, உழைக்கும் பத்திரிகையாளர்களுக்கு முன்பு கொடுக்கப்பட்ட அவார்டுக்கு மாறாக சுப்ரீம் கோர்டில் தீர்ப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட நிலைமை உழைக்கும் பத்திரிகையாளர்களை மட்டுமின்றி மற்றத் தொழிலாளர்களையும் பாதிக்கக்கூடியதாக இருக்கிறது. இந்தத் தீர்ப்பு "அப்ஸர்ட்" ஆகவும் "பெர்வெர்ஸ்", ஆகவும் இருக்கிறது.

MR. SPEAKER : May I remind the hon. Member that he is passing remarks on the judgment of the Supreme Court. I would strongly advise him not to refer to it and pass adverse remarks.

SRI M. KALYANASUNDARAM : No such remarks.

MR. SPEAKER : He calls the decision of the Supreme Court absurd and perverse. I would ask him to withdraw these remarks or I would expunge them; he can't pass such remarks.

SRI N. K. PALANISAMI : I withdraw them, Sir. ஒரு தொழிலுக்குச் சொல்லப்படும் விஷயம் மற்ற தொழில்களுக்கும் பொருந்தும். ஆகவே ஒரு தொழில் சம்பந்தமாகக் கூறப்படும் தீர்ப்பு மற்ற தொழில்களையும் பாதிக்கும். ப்ளான்டேஷன்ஸுக்கு இருக்கும் "அவார்ட்"-ஐயும் இந்தத் தீர்ப்பு பாதிக்கக்கூடும். "வேஜ் போர்ட்" சம்பந்தமாகவும் நெருக்கடி நிலைமையை இந்தத் தீர்ப்பு ஏற்படுத்தக்கூடும். ஆகவே தொழில் கோர்ட்டின் "அவார்ட்"-ல் சுப்ரீம் கோர்ட் தலையிடக்கூடாது என்று விதிக்கும் வகையில் அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டும் என்று மத்திய அரசாங்கத்திற்கு ராஜ்ய அரசாங்கம் சிபாரிசு செய்யவேண்டும்.

தொழில் தகராறுச் சட்டத்தின் 10 (a) விதியின் பிரகாரம், ஒரு "எஸென்ஷியல் ஸெர்வீஸ்" ஆக இருக்கும் தொழிலில் தகராறு ஏற்பட்டால் ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுத்தவுடன் தகராறை அட்ஜுடிகேஷனுக்கு விடவேண்டும். சென்னை மின்சாரத் தொழிலாளர்கள் விஷயத்தில் இந்த சர்க்கார் என்ன செய்திருக்கிறது ? ஊருக்கெல்லாம் உபதேசம் செய்யும் சர்க்கார் என்ன செய்திருக்கிறது ? நியாயப்படி தகராறை சர்க்கார் அட்ஜுடிகேஷனுக்கு விட்டிருக்கவேண்டும். ஆனால் அரசாங்கத்தார், லேபர் கமிஷனர் தலைமையில் ஒரு "நெகோஷயேஷன் கமிட்டி"யை நியமித்தார்கள். அந்தக் கமிட்டியின் மூலம் தகராறை விசாரிப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். நெகோஷியேஷன் கமிட்டியில் பேச்சு முறிந்துவிட்டது என்று சொன்னால் அதற்குப் பிறகு அந்த தொழிலாளர்கள் சர்க்காரிடம்தானே வரவேண்டும் ? 15-வது தொழிலாளர் மகாநாட்டில் என்ன தீர்மானிக்கப்பட்டது ? இப்படிப்பட்ட தகராறுகள் ஏற்படும் சந்தர்ப்பங்களில், ஒரு தொழிலாளிக்குத் தேவைப்படும் துணிகள், உணவுச் செலவு இதர வீட்டுச் செலவுகள் முதலியவைகளைக் கணக்கிட்டு ஒரு "நார்ம்" நிர்ணயிக்கவேண்டும் என்றும் அதற்குப் பிறகு அதன் அபிப்ராயம் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. அந்த அடிப்படையில் பார்த்தால் மின்சாரத் தொழிலாளர் ஒவ்வொருவருக்கும் 42 ரூபாய் கொடுக்கப்படவேண்டும். ஒரு மின்சாரத் தொழிலாளருக்கு இப்போழுது 18 ரூபாய் தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது. அதை 36 ரூபாயாக உயர்த்தவேண்டுமென்றுதான் அவர்கள் கேட்கிறார்கள். அவர்கள் மொத்தம் 40,000 பேர்தான். அவர்களில் மிகக்குறைவான பேர்களுக்கே உத்தியோகம் பெர்மனென்ட் ஆக்கப்பட்டிருக்கிறது. மற்றவர்கள் தாற்காலிக ஊழியர்களாக இருக்கிறார்கள். எல்லோரையும் "பெர்மனென்ட்" ஆக்கவேண்டுமென்று அவர்கள் லேபர் ஆபீசர் விசாரணையின்போது சொல்லியிருக்கிறார்கள். சர்க்கார் இந்த நியாயமான கோரிக்கைகளையெல்லாம் சரிவரப் பரிசீலித்து ஒரு நியாயமான முடிவிற்கு ஏன் வரக்கூடாது ?

25th March 1958] [Sri N. K. Palanisami]

கோயம்புத்தூரில் 40,000 "ஜின்னிங் பாக்டரி" தொழிலாளர்கள் இருக்கிறார்கள். மேலும், ஏராளமான கட்டிடத் தொழிலாளர்களும் ஏராளமான தீக்குச்சித் தொழிலாளர்களும் இருக்கிறார்கள். இவர்களுக் கெல்லாம் சர்க்கார் ஏன் குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்கக்கூடாது. 1945-ம் வருஷம் நிர்ணயித்த குறைந்த பட்சக் கூலிகள்தான் இப்போதும் இருக்கின்றன. தொழிலாளர்களின் 15-வது மகாநாட்டில், "நார்ம்" நிர்ணயித்து குறைந்த பட்சக் கூலிகளை நிர்ணயிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. சர்க்கார் அவ்வாறு ஏன் செய்யக்கூடாது? மேலும் கோயம்புத்தூர் போன்ற இடங்களில் ஏராளமான மோட்டார் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். சர்க்கார் ஒரு 'வேஜ் போர்ட்'-ஐ அமைத்து அவர்களுடைய குறைந்தபட்சக் கூலியையும் ஏன் நிர்ணயிக்கக்கூடாது? இதைச் செய்யவேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், தொழிலாளர்களை பாதிக்கும் விஷயங்கள்பற்றி இந்த மாநிலத்தில் மொத்தம் 8,572 கம்ப்ளெயின்டுகள் லேபர் ஆபீசருக்கு வந்திருக்கின்றன. அவைகளில் 3,541 பழிவாங்குதல், டிஸ்மிஸல் போன்றவைகள். அவ்வாறு டிஸ்மிஸ் செய்யப்பட்ட தொழிலாளர்கள் மறுபடியும் வேலைக்கு அமர்த்திக்கொள்ளப்படவில்லை. அவர்களுக்கு மறுபடியும் வேலை கிடைக்கச் செய்வதற்கு சர்க்காரும் நடவடிக்கை எடுக்கவில்லை; டிஸ்மிஸ் செய்யப்பட்டோ ஸஸ்பெண்ட் செய்யப்பட்டோ இருக்கும் தொழிலாளர்களுக்கு மறுபடியும் வேலை கொடுக்கப்படவில்லை. இதைப் பார்க்கும்போது சர்க்கார் தொழிலாளர்கள் பக்கம் இல்லை, முதலாளிகள் பக்கம்தான் இருக்கிற தென்று தெரிகிறது.

**The Hon. Sri R. VENKATARAMAN** : புள்ளிவிவரங்களை கனம் அங்கத்தினர் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று சொல்ல விரும்புகிறேன். புகார்கள் மொத்தம் 8,000-க்கு மேற்பட்டவை. அவைகளில். "டிஸ்மிஸல்" பற்றிய புகார்கள் மொத்தம் 3,000-க்கு மேற்பட்டவை. தொழிலாளர்களை முதலாளிகள் டிஸ்மிஸ் செய்தார்களேதவிர, அவர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டதற்கு நாங்கள் பொறுப்பாளி இல்லை. அது அவர்கள் செய்தது ஆகும், நாங்கள் செய்தது இல்லை.

**Sri M. K. MARIAPPAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் தொழில் அமைச்சர் பிரேரேபித்திருக்கும் மானிய கோரிக்கையை ஆதரிக்கிறேன். ஒரு நாடு முன்னேற வேண்டுமானால், அந்நாட்டில் கல்வியும் கைத்தொழில்களும் அபிவிருத்தியடையவேண்டும். கைத்தொழில்கள் எந்த முறையில் நடத்தப்படவேண்டும் என்பதுதான் மிகவும் முக்கியமான விஷயம். இப்பொது நமக்குக் கிடைத்திருக்கும் தொழில் அமைச்சர், தொழிலாளர்கள் நலனில் மிகவும் அக்கறை கொண்டவர். அவர் தொழிலாளர்களின் க்ஷேமநலன்களை நன்கு அறிந்தவர். அவர்களுடைய க்ஷேமநலன்களில் அவர் மிகுந்த அக்கறை செலுத்தி வந்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

எங்கள் பகுதியில் பெரிய பெரிய தொழிற்சாலைகள் இல்லையென்றாலும், 11-20 a.m.
விவசாயிகள்தான் அதிகமாக இருக்கிறார்கள். அதுவும் ஹரிஜன விவசாயிகள். அந்த ஹரிஜன விவசாயிகளுக்குத் தொழில் விவசாயம்தான். அந்தத் துறையில் அவர்களுக்குக் கூலி நிர்ணயம் இன்னது என்று நிர்ணயிக்கப்படவில்லை. எல்லாத் தொழில்களில் வேலை செய்பவர்களுக்கும் கூலி நிர்ணயம் ஏற்பட்டிருக்கும் காலத்தில் விவசாயத் தொழிலாளர்களுக்கும் கூலி நிர்ணயம் செய்தால்தான் சிறந்தது என்று நான் கருதுகிறேன்.

அதுபோன்ற ஹரிஜன சமுதாயம் முன்னேறவேண்டுமானால் தொழிற்துறையில் அவர்கள் முன்னேற்றம் காணவேண்டும். தொழிற்துறையில் முன்னேற்றம் கண்டால்தான் அவர்கள் பொருளாதாரம் உயரும். பொருளாதாரம் உயர்ந்தால்தான் ஹரிஜன மக்களுடைய வாழ்க்கையும் முன்னேற்றம் அடையும். ஆகவே, எங்களுடைய தாலூகாவில் அந்த மாதிரி எந்த விதமான தொழிற்சாலையும் கிடையாது. இருப்பினும் எங்களுடைய தாலூகா மலைப் பிரதேசம், ஆதலால் அங்கு மூங்கில் மரங்கள், சந்தன மரங்கள், பூவரச மரங்கள், கொன்னை மரங்கள், ஆவாரம் மரங்கள், கல்நார் மரங்கள் போன்றவை இருப்பதால், அவைகளிலிருந்து கிடைக்கும் பொருள்

[Sri M. K. Mariappan] [25th March 1958

களை வைத்துக்கொண்டு பெரிய தொழிற்சாலைகளை அங்கே ஏற்படுத்த முடியாவிட்டாலும் சிறிய தொழிற்சாலைகளையாவது ஏற்படுத்தி ஆங்காங்கே தொழில் வளம் ஏற்படும்படி செய்யலாம். அந்த முறையில் தொழில் வளம் பெற்றால் சிறு சிறு பிராந்தியங்களிலே மக்களுடைய குறைகள் நீங்கும் என்பதை அமைச்சர் அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஹரிஜன சமுதாயம் தொழிற்துறையைத்தான் நம்பிக்கொண்டிருக் கிறது. 5 சதவிகிதத்தினர்கூட மிராசுதார்களாக இருக்கமாட்டார்கள். ஏதோ ஒன்றிரண்டு பேர் இருக்கலாம். மற்றவர்கள் அனைவரும் தொழிலை நம்பிக்கொண்டிருப்பவர்கள். அதிலும் சர்க்காரால் அங்கீகாரம் பெற்று நடைபெறும் தொழிற்சாலைகளில் ஹரிஜனங்களுக்கென குறிப்பிட்ட சத விகிதம் அவர்களுக்கு உத்தியோகம் கொடுக்கவேண்டுமென்று நிர்ணயித் தால் ஹரிஜன மக்கள் அந்தத் தொழிற்சாலையில் சேர்ந்து அவர்களுடைய பொருளாதாரத்தை உயர்த்திக்கொள்ளமுடியும். நல்ல முன்னேற்றத் திற்கு வரமுடியும். அப்படிச் செய்யவேண்டுமென்பது என்னுடைய வேண்டுகோள்.

தொழிற்சாலையை ஏற்படுத்தும் நேரத்தில், அப்படி சிறு சிறு தொழிற் சாலைகளாக மோட்டார் தொழிற்சாலை போன்றும், ஹோட்டல் தொழிற்சாலை போன்றும் உள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும் ஹரிஜன மக்களிலிருந்து அதிகப்படியானவர்களை நியமித்தால்தான் அவர்களிடையே முன்னேற்றம் காணமுடியும். அதுதவிர, ஹரிஜன மக்கள் பொருளாதாரத்தில் உயர வேண்டுமானால் என்னுடைய அபிப்பிராயத்தை நான் சொல்ல விரும்பு கிறேன். மூங்கில் மரங்கள் இன்னும் இதர மரங்கள் வெட்டுவதும், காட்டி லாகாவில் கொடுக்கக்கூடிய காண்டிராக்டுகளும், ரோடுகள் அமைப்பது, பாலம் கட்டுவது, ஏரி மராமத்து செய்வது, இவை சம்பந்தப்பட்ட லேபர் காண்டிராக்ட்களெல்லாம் ஹரிஜனங்களுக்கே கொடுக்கப்படவேண்டும் என்ற முறையில் தொழிற்சாலைகள் ஏற்படுத்தி, அதிலுள்ள ஹரிஜனங் களுக்கு சர்க்காரிலிருந்து கடனைக் கொடுத்து, சர்க்காருடைய மேற்பார்வை யில் அந்தத் தொழிலை நடத்தி அதில் வரும் கனிசமான லாபத்தை அவர் கள் எடுத்துக்கொண்டு மூலதனத்தை சர்க்கார் எடுத்து வந்தால் அவர்கள் பொருளாதாரத்தில் முன்னேறுவதற்கு நல்ல வாய்ப்பு கிடைக்கும். அம்மாதிரி எடுக்கும் கண்டிராக்டுகள் எல்லாம் அவசியம் ஹரிஜனங்களுக்கே கொடுக்க வேண்டுமென்று சர்க்காரில் ஒரு சட்டம் நிர்ணயித்தால் அவர்கள் பொருளா தார முன்னேற்றம் அடையமுடியும். அவர்கள் தொழிற்துறையில் முன் னேற வசதி காண முடியும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே, தொழிலாளர்களுடைய நலனில் அக்கறைகொண்ட அமைச்சர் அவர்கள் எங்களுடைய தாலூகாவில் மூங்கில் வளம் அதிகம் உள்ளதால் அங்கே ஒரு காகிதத் தொழிற்சாலையை ஏற்படுத்தவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகின்றேன். காகிதத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு என்ன என்ன சாதனங்கள் வேண்டுமோ அவையனைத்தும் எங்களுடைய தாலூகாவில் இருக்கின்றன. சுமார் பத்தாயிரக்கணக்கான தாழ்த்த பட்ட மக்கள் நாளொன்றுக்கு கூலி கிடைக்காமல், தொழில் கிடைக்காமல் அவதி உறுகிறார்கள். அம்மாதிரி காகிதத் தொழிற்சாலை ஏற்படுத்தி னால் பத்தாயிரக்கணக்கான மக்களுக்குத் தொழில் கிடைக்கும். அதனால் மற்றவர்களிடத்தில் அடிமைகளாக இருந்து அவர்களுடைய இழிவை அதிகப்படுத்திக்கொள்ளாமல் தாங்கள் பொருளாதாரத்துறையில் உயரு வதற்கு ஏதுவாகும். சர்க்கார் இதிலும் அக்கறை செலுத்தவேண்டு மென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்களுடைய பிராந்தியத்தில் நெருப்புக் குச்சி செய்யும் அளவுக்கு மரங்கள் கிடைக்கின்றன. அவைகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படு கின்றன. எங்கள் தாலூகாவில் ஒரு நெருப்புப் பெட்டித் தொழிற்சாலையை அமைத்துக்கொடுக்க சர்க்கார் முன்வரவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

தொழிலமைச்சர் கொண்டுவந்த இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து என்னுடைய சொற்பொழிவை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

25th March 1958]

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** சபைத் தலைவர் அவர்களே,
இப்பொழுது கனம் மந்திரி அவர்கள் கொண்டுவந்திருக்கும் தொழிலாளர்
மான்யத்தை வரவேற்று சிற்சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன்.
கனம் மந்திரி அவர்கள் தொழிற்துறையிலே நல்ல அனுபவமும், ஆர்வமும் 11-27 a.m.
கொண்டு வேலை செய்வதோடு மட்டும் அல்லாமல் இப்பொழுது அவர்களு
டைய காலங்களிலே தொழிலாளரின் நிலைமை மிக உயர்ந்து நல்ல நிலை
மையிலே இருக்கிறது. பூசல் ஒழிந்தது மட்டும் அல்ல ; தொழிற்சாலை
யில் சுமுகமாக வேலை நடப்பதைப்பற்றியும் மிகவும் அவரை நான் பாராட்டக்
கடமைப்பட்டிருக்கிறேன். அந்த வகையிலே மிகவும் ஆர்வமாக வேலை
செய்வதைப்பற்றி மிகவும் சந்தோஷப்படுகிறோம்.

இப்பொழுது மற்றெல்லாத் தொழிற்துறைகளிலும் இருக்கக் கூடிய தொழிலாளர்களுக்கு ஓரளவுக்கு கூலி நிர்ணயங்கள் செய்து அந்தந்த துறையிலே வேலைசெய்யக்கூடிய தொழிலாளர் நல்ல நிலைமையில் இருந்துவரக்கூடிய அளவுக்கு நம்முடைய ராஜ்யத்தின் பொருளாதார நிலைமையை உத்தேசித்து அவர்களுக்குக் கூடுமான வரையிலும் வசதி செய்து கொடுத்து வந்திருக்கிறோம். இப்பொழுது முக்கியமாக, இந்தத் தேசத்தின் முதுகெலும்பாக உள்ளது விவசாயத் தொழிலும், நெசவுத் தொழிலும் தான். இன்றைக்கு அத்தொழிலாளர்கள் கவனிப்பாரற்று இன்றைக்கு நாட்டில் அனாதைகளாக, ஏழைகளாக நடமாடிக்கொண்டிருக்கும் நிலைமையிலே நாம் இந்த ராஜ்யத்திலே வைத்திருக்கிறோம். அவர்களைப்பற்றி இங்கேகூட பெரும்பாலும் அக்கறை செலுத்தவில்லை என்றே நினைக்கிறேன். கனம் அங்கத்தினர்கள்கூட, ஒரு நாடு முன்னேற்றம் காணவேண்டுமென்றால், விவசாயிகள், நெசவாளிகள் நிலை உயரவேண்டும். மற்ற தொழிற்சாலைகளில் 8 மணி நேரம் வேலை செய்தால்போதும் என்ற நிர்ணயம் இருக்கும்போது, நெசவுத் தொழிலில் அவன் நாளைக்கு சுமார் 18 மணி நேரம் வேலை செய்துகொண்டிருக்கிறான், அவனுடைய வருமானம் என்னவென்று பார்த்தால் நாளொன்றுக்கு 8 அணா முதல் 12 அணா வரையில்கூட வருமானம் இல்லை. அதைக்கொண்டு அவனும், அவனை நத்தி வாழுகின்றவர்களுடைய ஜீவனமும் அடங்கியிருக்கிறது.

ஒரு நெசவுசெய்ய வேண்டும் என்றால், அவன்கீழ் குறைந்தது பத்து பேர்கள் வேலை செய்யக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். முதலில் பாவு வார்ப்படம் போட்டுக்கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்புறம் நூல் இழை கொடுக்க ஒரு ஆள் வேண்டும். மற்ற கருவிகளைக் கொடுக்கச் சில ஆட்கள் வேண்டும். ஆகவே ஒரு நெசவாளிக்கு 16 உப தொழிலாளர்கள் உதவி செய்யவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். அதில் வரக்கூடிய பணத்தை வைத்துக்கொண்டு இத்தனை பேர்களும் சாப்பிடவேண்டியிருக்கிறதென்றால் ஒரு ஆளுக்கு பத்தணா, பதினான்கணா கூடக் கிடைக்கமாட்டேன் என்கிறது. அதோடு இன்றைக்கு மில் துணிக்கு ஒரு முனை வரி வந்துவிடுகிறது. அதனால் மில் துணியின் விலை நான்கணா, ஐந்தணா குறைந்துவிட்டது. இதனால் கைத்தறி துணி பல லட்சக்கணக்கான கஜங்கள் தேங்கிக் கிடக்கின்றன. அதோடு கைத்தறித் துணிக்குக் கொடுத்து வந்த ரிபேட்டும் $1\frac{1}{2}$ அணாவாக இருந்தது, இப்போது 1 அணாவாக்கப்பட்டுவிட்டது. அதனால் எட்டு கஜம் என்றால் நான்கணா குறைந்துவிடுகிறது. மில் துணி விலையும் குறைந்து இருக்கிறது. ஆகவே இன்றைக்கு ஒரு கஜம் மில் துணிக்கும், ஒரு கஜம் கைத்தறித் துணிக்கும் எட்டணா வித்தியாசம் ஏற்படுகிற காரணத்தினால் கைத்தறித் துணி தேக்கம் அதிகமாகி பல தொழிலாளர்கள் இன்று பட்டினி கிடக்கிற நிலைமை உண்டாகிவிட்டது. நெசவுத் தொழிலாளர்களுக்கு ஏதாவது வசதி இருக்கிறதா என்றால் கிடையாது. நல்ல ஆஸ்பத்திரி கிடையாது. கல்வி வசதி கிடையாது. ஒரு நாளைக்குப் பன்னிரண்டணாகூட வருமானம் இல்லாத நெசவாளி எப்படி தன் பிள்ளையைப்படிக்க வைக்கமுடியும். ஆகவே அவர்களுடைய குழந்தைகளுக்கு இலவசக் கல்விச் சலுகை அளிக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். பலகோடிக்கணக்கான மக்கள் நெசவுத் தொழிலை நம்பி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய குழந்தைக்கு இலவசக் கல்விச் சலுகை அளிப்பதோடு தொழில் வாய்ப்பு வசதியைக் கொடுக்கவேண்டும் என்பதாகக் கேட்டுகொள்கிறேன். இந்த

[Sri M. R. Kandaswami Mudaliyar] [25th March 1958

நெசவுத்தொழிலைப்போலவே இன்றையதினம் நம் நாட்டில் பெரும் பாலான தொழிலாளர்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பார்கள். அந்த தொழிலாளர்களைப் பாருங்கள். இதர தொழிலாளர்களைப் பொறுத்தமட்டில் 70 ரூபாயிலிருந்து, 250 ரூபாய் வரைக்கும் கூலி இன்றையதினம் கிடைக் கிறது. ஆனால் இன்றையதினம் விவசாயக் கூலிகள், நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கிற கூலிகள் இவர்களுக்குத்தான் மிகமிகக் குறைவாகக் கூலி கிடைக்கிறது. விவசாயியை எடுத்துக்கொண்டால் எட்டணு, பத்தணு, அது வும் மாதத்தில் 20 நாட்கள்கூட சரியாக வேலை கிடைப்பது இல்லை. அவர் களுடைய குழந்தைகளை எப்படிப் படிக்கவைக்கமுடியும் என்று கேட்கிறேன். ஆகவே இவர்களுடைய குழந்தைகளுக்கு எல்லாவிதமான சலுகைகளும் கொடுக்கவேண்டும். பொருளாதாரத்துறையில் அவர்கள் முன்னேற்றம் அடைவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு இன்னென்று. விவசாயிகளுக்குக் கூலி நிர்ணயம் செய்வ தைப்பற்றி பலர் பேசினார்கள். அதை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். ஆனால் நாட்டின் நிலைமையை உணர்ந்து செய்வதைச் செய்யவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவில் ஒவ்வொருவிதமாக இன்றைக்கு விவசாய வேலை கள் நடைபெறுகிறது. தஞ்சாவூர், திருச்சி போன்ற ஜில்லாக்களில் கூலி நிர்ணயம் செய்வது பொருத்தமாக இருக்கலாம். சேலம் போன்ற வறண்ட ஜில்லாக்களில் ஒரு ஏக்கருக்கு நிலச்சொந்தக்காரனுக்கே 100 ரூபாய் வரமாட்டேன் என்கிறது. பாறையையும், மலையையும் தோண்டி விவ சாயம் செய்யப்படுகிற நிலம் அது. அதோடு ஒரு மகசூல் கண்டுபிடிப்ப தற்குள் உரம் அடிப்பது, நிலம் உழுவது, விதை விதைப்பது, நடுவது, களைபிடுங்குவது, என இப்படியாகப் பலதரப்பட்ட வேலைகள் நடைபெறு கின்றன. வேலைக்கு ஏற்றாற்போல் கூலி கொடுக்கப்பட்டும் வருகிறது. ஒரேவிதமாக நிர்ணயம் செய்துவிடுவது என்பது சாத்தியமில்லாத காரியம்.

ஆகவே சர்க்கார் இவ்விஷயத்தை நன்கு கவனித்துச் செய்யவேண்டும். அவசரப்பட்டு எதையாவது செய்துவிட்டால் விவசாயிகளுக்கு நன்மை அளிப்ப தைவிட இது பெரிதும் தீங்கை விளைவித்துவிடலாம். நம்முடைய சட்டங்கள் விவசாயிகளுக்கு எவ்விதத்திலும் பாதகமாக இருக்கக்கூடாது. ஆகையால் நிலச்சீர்திருத்தம் சம்பந்தமாக செய்கிற காரியங்களை எல்லாம் நன்கு கவனித்துச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அதுபோக சமீபத்தில் சூரமங்கலத்தில் இருக்கக்கூடிய சுண்ணும்புத் தொழிற்சாலையை மூடுவது என்பதாக அங்குள்ள தொழிலாளர்களுக்கு எல்லாம் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். கிட்டத்தட்ட 850 தொழிலாளர் கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லோரையும் வெளியேற்றுவது என்றால் அந்தத் தொழிலாளர்களுடைய நிலைமை என்ன ஆவது ? ஆகவே சீக்கிரமே சர்க்கார் அதை எடுத்துக்கொள்வதா, தனியாரிடத்தில் ஒப்படைப்பதா என்பதை முடிவுசெய்து அந்தத் தொழி லாளர்கள் வெளியேறித் திண்டாடாத நிலைமையை உண்டுபண்ணவேண் டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன், அடுத்தபடியாக . . .

* **Sri K. ANBAZHAGAN**: மதிப்பிற்குரிய அவைத்தலைவர் அவர் களே, தொழிலாளர்கள், தொழில் நிலையங்கள் பற்றிய மானியத்தை ஒதுக்குவதில் வெட்டுப் பிரேரணை ஒன்றைத் தருவதன் மூலம் மாற்றுக் கட்சிகள் தங்கள் கருத்துகளை எடுத்துரைப்பதற்கு வாய்ப்பு உள்ள நிலைமையில் நான் இங்கே பேசுகின்றேன். வெட்டுப் பிரேரணையின்மூலம், தொழிலாளர் களுக்குச் செய்யவேண்டிய பலப் பல நலன்களையும் மாற்றுக் கட்சியினர் எடுத்துச் சொல்வதின் காரணமாக, ஆளும் கட்சியினைச்சேர்ந்த பலரும் பல கருத்துக்களை எடுத்துக் சொல்லியிருக்கிறார்கள். உண்மையிலேயே தொழிலாளர் இயக்கத்தில் தொடர்புகொண்ட ஒருவர் தொழில் இலாகா அமைச்சராகப் பணியாற்றுவது—ஆட்சி பீடத்தில் தொழிலாளர் நலத்தை உணர்ந்தவர் ஒருவர் இருப்பது வரவேற்கத்தக்கது என்றாலும் ஆட்சி பீடத்தின் பொதுக் கொள்கையைப் பொறுத்துதான் தொழில் மந்திரிக்கு தொழிலாளர்களின் நலனில் அதிகமான அக்கறையும், ஆர்வமும் இருந்தாலும்கூட அவர் செயல்பட முடியும் என்பதை நினைவுக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

25th March 1958] [Sri K. Anbazhagan]

மூன்று கோடி மக்கள் வாழும் நமது தமிழ் நாட்டில் 1957-ம் ஆண்டு புள்ளிவிவரப்படி 5 லட்சத்து 3,000 பேர்கள் தாம் இப்படி ஏதாவதொரு குறிப்பிடத்தக்க தொழில்துறையில் ஈடுபட்டிருக்கிறார்கள். பிற வகையான தொழிலில் இருப்பவர்களைக் சேர்த்து கருதினும் ஏறத்தாழ ஆறு லட்சம் மக்களுக்கு மேல் குறிப்பிடத்தக்க தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களாகயில்லை.

*THE HON. SRI R. VENKATARAMAN : பாக்டரி சட்டத்தின் கீழ் ரெஜிஸ்டர் செய்பவர்கள் ஷாப் ஆக்ட்படி ரெஜிஸ்டர் செய்பவர்கள்தான். பாக்டரி ஆக்ட்படி ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்றால் பவர் உபயோகப்படுத்தி 10 பேர்களுக்கு வேலை இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இருபது பேர் பவர் இல்லாமல் இருக்க வேண்டும். பெரிய தொழிற்சாலைகளுக்குத் தான், இது.

SRI K. ANBAZHAGAN : பெரிய தொழிற்சாலைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் ஐந்து லட்சம் பேர்கள். தோட்டத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் 70,000 பேர். ஆகவே, இந்தக் கணக்கைக் இந்த நாட்டில் வாழும் 3 கோடி மக்களுடன் ஒப்பிடுகிறபோது இந்த நாட்டில் மிகவும் பெரும் பாலான மக்களுக்கு இவ்வகை தொழில்துறையில் இடம் தேடித்தர வேண்டியது அவசியம் இந்த நாட்டை ஆள்பவரைச் சார்ந்திருக்கிறது என்பது விளங்கும். தொழில்துறை வாய்ப்பு, ஐம்பதில் ஒரு பங்கு மக்களுக்கு வேலை கிடைக்கக்கூடிய அளவுதான் தொழிற்சாலைகள் இந்நாட்டில் இருக்கின்றன. தொழில்துறை வேலை தேடித்தரும் ஸ்தாபனங்கள், 'எம்ப்ளாய்மென்ட் எக்சேன்ஞ்' இன்றையதினம் மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்திலிருந்து மாநில அரசாங்கத்தின் நிர்வாகத்திற்கு உரியதாகியிருக்கிறது. நிர்வாகப் பொறுப்பை மாநில அரசாங்கம் ஏற்றுக்கொண்டளவில், அது என் போன்றவர்களால் வரவேற்கப்படுவதாகும். மாநில அரசாங்கத்திற்கு அது ஒரு செலவுக் கணக்காகக்கூடும். எனினும் நிர்வாகப் பொறுப்பு மாநில அரசாங்கத்திற்கு இருக்குமானால் தான் எவ்வளவு பேர்களுக்கு தொழில்துறையில் வாய்ப்பு அளிக்க முடியவில்லை என்பதை மாநில அரசாங்கம் அவ்வாறு உணர்ந்து அதற்கான திட்டங்களைத் திட்ட முயற்சிக்கக்கூடும். அந்த வேலை தேடித் தரும் நிலையத்தில் 57-ம் ஆண்டில் ஏறத்தாழ 160,000 பேர்கள் விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் 24,000 பேர்களுக்குத்தான் வேலை தேடித்தரப்பட்டிருக்கிறது. வேலை தேடித்தரும் ஸ்தாபனம், விண்ணப்பித்துக் கொள்கிறவர்களில் ஏறத்தாழ பாதிப் பேர்களுக்காவது வேலை தேடித்தரும் வாய்ப்பு இருந்தால்தான் அந்த ஸ்தாபனமும் பயன்பட்டு மக்களின் குறையும் நீங்க முடியும். தொழிலாளர்களுக்கு தொழிற்சாலைகளும் என்ற தலைப்பில் இங்கு பேசும்போது, பாக்டரிஸ் அன்ட் லேபர் என்று ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ள தலைப்பின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ள கருத்துக்கள் மட்டுமல்லாமல் வேறு தொடர்புள்ள கருத்துக்களும் பேசப்படத்தக்கனவாகும். இவற்றிற்குச் சில அடிப்படையான கொள்கைகள் இருக்கிறது. விவசாயத்துறையிலும், நெசவுத் தொழிலிலும் ஈடுபட்டிருப்பவர்களின் குறைகள் பாக்டரி சட்டத்தின் கீழ் வராவிட்டாலும்கூட பொதுவாக அவர்களும் தொழிலாளர் என்ற காரணத்தினால் அவர்கள் நிலையும் விவாதத்திற்குரியதாகிறது. சற்று முன் பேசிய கனம் அங்கத்தினர் ஒருவர் விவசாயத் தொழிலாளர்களுக்கு நாட் கூலி தீர்மானிக்கப்படவேண்டுமென்றும் அதேபோல் கைத்தறித் தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச கூலி தீர்மானிக்கப்பட வேண்டுமென்றும் எடுத்துக்காட்டி வலியுறுத்தியதை நான் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன். அடுத்து, உடனடியாக அவர்களின் அடிப்படை நாட் கூலி தரம் நிர்ணயிக்கப்பட்டால்தான் சமுதாய வாழ்க்கையில் பொதுவாக ஏற்படவேண்டிய முன்னேற்றத்தை நாம் காணமுடியும். குறிப்பாக இந் நாட்டில் விவசாயத்துறையில் ஏற்பட்டிருக்கிற பல போராட்டங்கள், கையேர் வாரந்தார், மாட்டேர் வாரந்தார், குத்தகைதார், முதலானோர் பெற்றிருக்கிற உரிமைகள் அந்நிலத்திற்கு உரியவர்களால் பறிக்கும்போது ஏற்படுகிற தகராறுகள் நாட் கூலிக்கு வருகிறவர்கள் மிகக் குறைந்த கூலிக்கு வேலை செய்ய வருவதால்தான் வளருகிறது. ஆகவே, குறைந்த அளவு 11-40 a.m.

[Sri K. Anbazhagan] [25th March 1958

நாட் கூலி கொடுத்து நிறைய பலன் பெறும் வாய்ப்பு இருப்பதினுல்தான் நிலத்திற்கு உச்சவரம்புகட்டத் தடை ஏற்படும் சூழ்நிலே வளருகிறது. ஆகவே, நாட்கூலிக்கு வருபவர்களில் குறைந்த பட்சக் கூலி நிர்ணயிக்கப் பட்டால்தான் வேறு எந்த சீர்திருத்தங்களும் கொண்டு வரமுடியும். தொழிலாளர்களின் குறைந்தபட்ச கூலியைத் தீர்மானித்த வகையில், 54-ம் ஆண்டில் ஆண்டொன்றுக்கு ஒருவருக்கு 689 ரூபாய் சராசரி வருமானம் கிடைத்தது, 55-ம் ஆண்டில் 888 ரூபாயாயிற்று, 58-ல் அது 1,016 ரூபாயாயிற்று என்று புள்ளி விவரம் காட்டப்படுகிறது. இந்தப் புள்ளி உயர்வுங்கூட தொழிலாளர்களாக இருப்பவர்களின் இன்றைய வாழ்க்கை நிலேயை உயர்த்தியிருக்கிறதா என்று பார்த்தால் நிச்சயமாக உயர்த்தியிருக்கிறது என்று கூற முடியாது. காரணம், வாழ்க்கைத் தரத்தை கட்டுப்படுத்துவதற்கான முக்கியமான கருவியாக இருப்பது, விலேவாசிகளின் நிலேயாகும். விலேவாசியைப் பார்க்கும்போது, 54-ம் ஆண்டிலிருந்து 56-ம் ஆண்டிற்குள் விலேவாசிகள் ஏறித்தானிருக்கிறது. இறங்கிவிடவில்லே. இப்பொழுது மேலும் சில தொழில்துறைகளில் அடிப் படை கூலி தீர்மானிக்கப்பட்டிருப்பதால் மொத்தத்தில் 1,016 என்று புள்ளியை காட்ட முடிகிறதே தவிர, தொழிலாளர்கள் இன்றைய தினம் பெறும் ஊதியம் அவர்களின் தேவைகளே நிறைவேற்றக்கூடியதாக இருக்க இல்லே. ஆயிரத்து பதினுறு என்ற புள்ளியை பார்க்கும்போது அது பெரியதாகத் தெரியலாம். ஆனுல் அது, மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய் அளவு கூட ஆகவில்லே. அந்த அளவு வருமானத்திற்குக்கூட வாய்ப்பில்லே என்று சொன்னுல், தொழிலாளர்களாக இருப்பவர்கள், கட்டுப்பாடான தொழிற்சங்கத்தை நடத்துபவர்கள், நுண்ணறிவு பெற்று திறமையாக செயலாற்றுபவர்கள், அவர்களின் நிலேமையே இப்படி பரிதாபகரமாக இருந்தால் நாட்டின் சூழ்நிலே எவ்வளவு தாழ்ந்திருக்கிறது என்பதை இதிலிருந்து நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். மற்ருென்று, இத்தகைய நாட்கூலி நிர்ணயிக்கும்போது, ஒரு குடும்பத்திற்கு மூன்று பேர்கள் என்ற அடிப்படையில் தீர்மானிக்கப்படுகிறது. அப்படித் தீர்மானிப்பதின் மூலம் அவர்களுக்கு நாம் சரியான ஊதியம் அளிக்கத் தவறி விடுகி ருேம். ஏனெனில், சாதாரணமாக, ஒரு தொழிலாளி குடும்பத்தில் கணவன், மனேவி, தவிர இரண்டு குழந்தைகளாவது இருக்கும். ஆகவே, மூன்று பேர்கள் என்று வைத்துத் தீர்மானிப்பது நியாயமாகாது என்பதால் நான்கு பேர் என்ற அடிப்படையில் தீர்மானிக்கவேண்டும். அடுத்து, தொழிற் சாலேகளில் பல காரணங்களால் அடிக்கடி விபத்துக்கள் ஏற்படுகின்றன. இந்த விபத்துக்களின் எண்ணிக்கை, கடந்த இரண்டு ஆண்டு காலமாகப் பார்க்கும்போது பெருகியிருக்கிறது. அங்ஙனம் விபத்துக்கள் பெருகுவ தற்கு, இரண்டு முக்கிய காரணங்கள் இருக்க முடியும். ஒன்று, நிர்வாகத்தை நடத்துபவர்கள், நான் குறிப்பிடுவது அரசாங்க நிர்வாகத்தை யல்ல, ஆலேகள், அல்லது தொழிற்சாலேகளே நடத்துகின்றவர்கள் தங்கள் லாபத்தை மட்டும் கருதி அலட்சியமாக நடந்துகொள்ள வேண்டும். அல்லது அதில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் தங்கள் உயிரைப்பற்றிக் கூட கவனிக்காமல், கவனக்குறைவாக வேலே செய்ய வேண்டும். இதில் எதுவாயிருந்தாலும் அது நன்கு ஆராயப்படவேண்டும். விபத் திற்கு எது காரணமாகிறது ? அது, பொதுவாகவே வேலே செய்பவர்களின் உடல்நலக் குறைவா ? போதுமான கவனத்தோடு வேலே செய்யாததன் விளேவா ? அல்லது தொழிலாளர்களுக்கு போதுமான பாதுகாப்பு வசதி அளிக்கப்படுவதில்லேயா ? அல்லது உற்சாகம் அற்ற தன்மையின் விளேவா ? அல்லது கவனக் குறைவால் ஏற்படுகிறதா ? கவனக்குறைவென்ருல், அதற்கு யார் காரணம் ? என்பனவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து விபத்துக்கள் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும். இதைக் குறித்து எனக் குத் தோன்றுகிற ஒரு ஆலோசனேயைச் சொல்ல விரும்புகிறேன். விபத்து கள் ஏற்படாத தொழிற்சாலேகளுக்குப் பாராட்டுப் பத்திரங்கள் வழங்கு வதின் மூலம் அல்லது விபத்துக்கள் ஏற்படாமல் நிர்வாகம் நடத்துகின்ற வர்களே சிறப்பிப்பதன் மூலம் விபத்துக்களே தவிர்ப்பதற்கு ஊக்கமளிப்பதற் கான ஒரு முறையைக் கையாள வேண்டும். விபத்துகளுக்கு ஆளாகிற தொழிலாளர்களுக்கு அல்லது அவர்களின் குடும்பங்களுக்குத் தரப்படும் நஷ்டயீடு உயர்த்தப்படவேண்டும். தொழிலாளர்களின் உழைப்பு உற்பத்

25th March 1958] [Sri K. Anbazhagan]

திக்குப் பயன்படுகிறது அதே போன்று தொழிற்சாலை உரிமையாளரின் லாபத்திற்கும் பயன்படுகிறது. விபத்திற்கு ஆளாகியவர்களுக்கு எக்காரணத்தினால் விபத்து ஏற்பட்டாலும் ஏதோ குறைந்தபட்ச ஈடு தொகை தந்து விடுவதினால் மட்டும் உண்மையான திருப்தி ஏற்பட்டுவிடுவதாக நான் நினைக்கவில்லை. மாறாக, அளிக்கப்படும் ஈட்டுத்தொகை கொடுக்கும் பணம் அதிகமாக இருக்குமானால் நிர்வாகத்தை நடத்துபவர்கள் நிர்வாகத்தைக் கவனமாக நடத்துவார்கள். அத்துடன் விபத்துக்கு ஆளான தொழிலாளியும், அவனது குடும்பமும் ஓரளவு கஷ்டத்திலிருந்து விடுதலை பெற்றவராவார்கள். இப்படிச் செய்வதின் மூலம் விபத்துக்களின் எண்ணிக்கையைக் குறைக்க முடியும். மற்றொன்று பஸ் அல்லது ஆட்டோமோபைல் துறையில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளர்களை பற்றியும் நாம் கூர்ந்து கவனிக்க வேண்டும். அப்படிப்பட்டவர்கள் தொழில் செய்கையில் விபத்து விளையும்போது அவர்களால் பொது மக்கள் பலர் பலியிடப்படுகிறார்கள். ஒருவரின் தவறு காரணமாகப் பலப் பலர் ஆபத்திற்கு ஆளாகும் முறையில் இவர்கள் வேலை செய்கிறார்கள். ஆகவே, அவர்கள் எந்தவிதமான தவறும் செய்யாமல் அத்தொழிலை கவனத்துடன் செய்ய அவர்களுக்கு சிறப்பு ஊதியம் கொடுக்கப்பட வேண்டும். போனஸ் அல்ல நான் குறிப்பிடுவது, போனஸ் என்றால் அது லாபத்தில் இருந்து கிடைக்கும் ஒரு பங்காகும். மேலும், அது தொழிலாளர்களின் உரிமையும் கூட ஆகவே, பஸ் ட்ரைவர்களுக்கும், அதுபோன்ற தொழிலில் ஈடுபட்டவர்களுக்கும், பிறருக்கும் தம்மால் விபத்து ஏற்படாமல் பாதுகாக்கும் பொறுப்புள்ளவர்களுக்கு சற்று அதிகப்படியான ஊதியம் கொடுக்க வேண்டும். தவறு செய்யாமல் இருப்பதற்கு எச்சரிக்கையாக, தவறு செய்யாமல் இருக்க ஒரு தூண்டுகோலாக அவர்களுக்கு தவறு செய்யாமல் கடமையைச் செய்பவர்களுக்கு ஆண்டுதோறும் சிறப்பு ஊதியம் கொடுக்க வேண்டும். அவர்களின் ஊதியத்தை அவ்வாறு உயர்த்துவது என்பது நாம் சமுதாயத்திற்கு செய்யும் ஒரு கடமையாகும். மற்றொன்று, தொழிலாளர்களுக்காக சட்டங்கள் கொண்டு வருகிற இக்காலத்தில் சில குறிப்பிட்ட தொழில்களுக்கு இன்னும் சட்டம் கொண்டுவரப்படவில்லை என்பதை நினைவூட்ட விரும்புகிறேன். அச்சகத்தில் அச்சுக் கோர்ப்பு வேலை செய்பவர்களின் பாதுகாப்பிற்கு சட்டம் கொண்டு வரவேண்டும். அத்தொழில் அவர்கள் நெடுங்காலம் வேலை செய்வதால் அவர்களின் கண்கள் பழுதாகிவிடுகின்றன. அப்படிப்பட்ட தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்குச் சட்ட மூலம் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டும். மற்றும் பீடித் தொழிலாளர்களுக்கு சட்டம் கொண்டுவருவது போன்ற சுருட்டுத் தொழிலாளர்களுக்கும் சட்டம் இயற்றப்படவேண்டும்.

சிறப்பாக தீப்பெட்டி, தீக்குச்சித் தொழிலாளர்களுக்கு நிரந்தரமான நல்ல சட்டப் பாதுகாப்பு இல்லை. அவர்கள் நாள் முழுவதும் வேலை செய்யவில்லை என்றாலும் ஓய்வு நேரங்களில்தான் வேலை செய்கிறார்கள் என்றாலும் அவர்களுக்கும் குறைந்த பட்ச ஊதியம் தீர்மானிக்கப்பட்டாக வேண்டும். அடுத்து தோல் பதனிடும் தொழிலாளர்களும் கஷ்டப்பட்டு உழைக்கிறார்கள். அவர்கள் மூலம் அதிக லாபத்தை முதலாளிகள் பெறுகிறார்கள். அவர்களுக்கும் குறைந்த பட்சம் ஊதியத்தையும் தீர்மானிக்க வேண்டும். இவை எல்லாவற்றையும்விட வர்த்தக குமாஸ்தாக்கள் சிறு சிறு கடைகளில் பணியாற்றும் ஊழியர்கள் அவர்களுக்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள சட்டப் பாதுகாப்பையும் பெறமுடியாத நிலைமையில் இருக்கிறார்கள். சில கடைகளில் மூன்று பேருக்கு மேல் நாலைந்து பேர்களை வைத்து வேலை செய்வித்தாலும், அதிகாரிகள் கேட்கும்போது மூன்று பேர்கள்தான் இருக்கிறார்கள் என்று தெரிவித்து விடுகிறார்கள். இவ்வாறு சட்டதின்படி தொழிலாளர்களுக்கு கிடைக்கவேண்டிய பாதுகாப்பு இல்லாமல் போய்விடுகிறது. இதை நீக்குவதற்காக அவ்வகையான கடைகள் வாரத்திற்கு ஒரு நாள் மூடப்படவேண்டும் என்று வலியுறுத்தப்படவேண்டும். அல்லது வாரத்திற்கு ஒரு நாள் அந்தக் தொழிலாளர்களுக்குக் கட்டாயமாக ஓய்வு கொடுக்கவேண்டும். அதுவும் முடியாவிட்டால் ஏதேனும் ஒரு மாற்று வழி கண்டுபிடிக்கவேண்டும். மேலும் பத்திரிக்கை தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற ஊழியர்

[Sri K. Anbazhagan] [25th March 1958

களுக்கு என்று நிர்ணயிக்கப்பட்ட வேஜ் போர்ட் அளித்த தீர்ப்பானது சமீபத்தில் அதன் மேல் சுப்ரீம்கோர்ட் அளித்த தீர்ப்பினால் பயனற்றதாக ஆக்கப்பட்டிருப்பதை அமைச்சர் அவர்கள் அறிவார்கள். இந்த முடிவினால் இது எல்லா ஊழியர்களையும் பாதிக்குமோ என்று சந்தேகிக்கும்படியான நிலைமை இன்று ஏற்பட்டிருக்கிறது. இந்தத் தீர்ப்பினைக் காட்டி இனிமேல் முதலாளிகள் சரியான ஊதியத்தையும் உரிமைகளை வழங்க சம்மதிக்க மறுக்கலாம். உயர் நீதி மன்றத்தினுடைய இந்தத் தீர்ப்பு, பத்திரிகை தொழிலாளர்களாய் இருந்தாலும் சரி, அல்லது வேறு எந்த தொழிலாளர் களாய் இருந்தாலும் சரி, அதற்கென்று நியமிக்கப்படும் ஒரு ஊதியகுழு கொடுக்கும் தீர்வைப்பாதிக்காது என்ற முறையில் ஒரு சட்டத்தைக் கொண்டு வரவேண்டும். தேவைப்பட்டால் அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்காக, பாராளுமன்றத்தின் மூலமாக முயற்சி எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். இதற்காக மத்திய அரசாங்கத்திற்கு ஓய்வுரை கூறி நம்முடைய அரசாங்கம் வலியுறுத்தவேண்டும். தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பாதுகாப்பிலிருந்து அல்லது சட்டத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு அரசியல் சட்டத்திலுள்ள சந்து பொந்துகளின் வழியாக உயர் நீதி மன்றம் மூலம் வேறு தீர்ப்புகள் கொண்டு வராதபடி செய்வதற்கு பாராளுமன்றத்தின் மூலமாக அரசியல் சட்டத்தை மாற்றுவதற்கும் திருத்து வதற்கும் மத்திய அரசாங்கத்தை நம்முடைய அரசாங்கம் வற்புறுத்த வேண்டும். இதற்கு எதிர்கட்சியிலுள்ளவர்கள், மாற்றுகட்சியிலுள்ளவர் கள் ஒத்துழைப்பார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். பொது வாக தொழிலாளர்களை பொறுத்தவரையில் சக்திக்கேற்ற உழைப்பு தேவை கேற்ற வசதி என்ற கொள்கையை மனதில்கொண்டு திட்டமிடுவது அவசியம். அதில் தேவைக்கேற்ற வசதியைத் தீர்மானிக்கப்படும் பொழுது அன்றுடம் இருக்கின்ற விலைவாசிகளை கருத்தில் கொண்டு அவற்றை நிர்ணயிக்கவேண்டும். அதே போன்றுதான் சக்திக்கேற்ற உழைப்பையே அவர்களிடத்தில் எதிர் பார்க்குமாறும் திட்டமிடவேண்டும். இவ்வாறு தொழிலாளர் நலனையே —முதன்மையாகக் கருதியே—தொழிற்சாலைகள் இயங்குமாறு அமைச்சர் அவர்களை கவனிப்பதுடன் அதற்கான சட்டங்களையும் விரைவாக நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri T. S. RAMASWAMY PILLAI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப்பிரேரணையை ஆதரித்து ஒருசில வார்த்தைகளை சொல்ல ஆசைப்படுகிறேன். எனக்கு முன்னால் பேசிய நண்பர்கள் சொன்னது மாதிரி இன்றைக்கு தொழிலாளர் இலாகா அமைச்சராக விளங்குபவர், தொழி லாளர்களுக்காக பாடுபட்டவர் என்பது மட்டுமல்ல, நம்முடைய தேசத் திலும், சர்வ தேச அரங்கிலும் தொழிலாளர்களுடைய நியதிகளையும் தொழிலாளர்களுடைய சட்ட நுணுக்கங்களையும் தெரிந்திருக்கின்றவர், அதில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர், அத்தகைய ஒருவர் தொழிலாளர் இலாகாவுக்கு அமைச்சராக கிடைத்திருப்பது தொழிலாளர் வர்க்கத்திற்கே பெருமை தரக் கூடியதாகும் என்ற முறையில் நான் அவர்களை பாராட்டுகிறேன். இதற்கு முன்னால் எல்லாம் இதே அமைச்சர் அவர்கள் தொழிலாளர்களுக்கு வேண்டி வாதாடிய எத்தனையோ அரங்குகள் உண்டு. அப்போது எல்லாம் அவர்களிடம் இம்மாதிரிப்பட்ட பொறுப்புகள் இல்லை. ஆனால் இப்போது பொறுப்புகள் கையில் இருக்கின்றது. ஆகவே அவர்கள் நினைத்த அளவுக்கு செய்ய முடியாதபடி பெரிய சிக்கல்கள் நிறைந்திருக்கிறது என்பதை நாங்கள் அறிவோம். பொதுவாக தொழிலாளர்களுடைய குறைகளை தெரி விக்கவில்லையானால் அவர்களுக்கு செய்ய வேண்டிய கடமையிலிருந்து தவறியவனாவேன். நம்முடைய ராஜ்யத்தை பொறுத்த அளவில் தொழி லில் பல சட்டங்கள் இருக்கின்றன. இதை அமுலுக்கு கொண்டு வரும் பொழுது அரசாங்கம் மாத்திரம் அதற்கு பொறுப்பாக இருக்க முடியாது. தொழிலாளர்களுக்கும் தொழிலாளர் சங்கங்களுக்கும் பொறுப்பு உண்டு. தொழிற்சங்கங்கள் உதவி அளித்தால் அரசாங்கத்திற்கு இவைகளை அமு லாக்குவதற்கு லெகுவாக இருக்கும். இதற்கு முதலாளிகள் சட்டத்திற்கு ஏற்றவாறு வராவிட்டால் அரசாங்கத்தினுடைய பாடு கொஞ்சம் கஷ்டமாகத் தான் இருக்க முடியும். இங்கே வொர்க்கிங் ஜர்னலிஸ்டுகளைப்பற்றி குறிப் பிட்டார்கள். என்னைப் பொறுத்தவரையில் ஒரு தொழிலாளர் பகுதியி

25th March 1958] [Sri T. S. Ramaswamy Pillai]

லிருந்து வந்தவன் நான். இந்த பத்திரிகை ஊழியர்களுடைய ஸ்தாபனம் பலமான ஸ்தாபனம்தான் என்றாலும் போராட்ட ரீதியில் வளர்ந்த ஸ்தாபனம் அல்ல என்பதை அமைச்சர் அவர்களும் அறிவார்கள். இத்தகைய முறைகளை நாம் பார்க்கிறோம். ஸ்தாபனம் ஒன்றாக இருந்தாலும், அடிக்கடி தகராறு ஏற்படுகிறது. காரியதரிசி டிஸ்மிஸ் செய்யப்படுகிறார். சட்டத்தின் மூலம் மட்டுப்படுத்த முடியாத நிலைமையில் அவர்கள் இல்லை. முதலாளிகளின் கை ஓங்கி வளரும்பொழுது அதை தடை செய்ய பலனளிக்கக்கூடிய நடவடிக்கைகளை, சட்டங்களை கொண்டுவரவேண்டுமென்று நான் கருதுகிறேன். இதைப்பற்றி என்னைவிட அமைச்சர் அவர்களுக்கு நன்றாகத்தெரியும். வேஜ் போர்டில் அமைச்சர் அவர்களும் ஒரு அங்கத்தினர். பல நல்ல காரியங்களும் முடிவு செய்யப்பட்ட பின்னர் அதை அமுல் நடத்துவதற்கு சட்டம் குறுக்கே நிற்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக இந்த பத்திரிகை தொழிலாளர்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்போது வேஜ் போர்டு தீர்ப்புக்கு மாறாக சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வந்திருக்கிறது. இந்த நிலையில் என்ன செய்யவேண்டும். இந்த தீர்ப்பு தொழிற்சங்க வாதிகளுக்கு எல்லாம் ஒரு பிரச்னையாக—ஒரு சவாலாக—வந்து சேர்ந்திருக்கிறது. இந்த நிலைமையை மாற்றுவதற்கு அரசியல் சட்டத்தைதான் மாற்றவேண்டும் என்றால் கண்டிப்பாக அரசியல் சட்டத்தை மாற்றத்தான் வேண்டும். இதற்கு தொழிற்சங்க வாதிகள் எல்லாம், ஆலோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். அமைச்சர் அவர்கள் இதற்கு வேண்டிய முயற்சி எடுப்பார்கள் என்று நம்புகிறேன். மேலும் நம்முடைய அரசாங்கத்திலிருந்து பல தொழில் துறைகள் நடத்தப்படுகின்றன. உதாரணமாக டிரான்ஸ்போர்ட் இலாகாவைப்பற்றி குறிப்பிடும்பொழுது நான் வருத்தத்துடன் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால் அரசாங்கத்தை பொறுத்தவரையில் தொழில் அதிபர்கள் என்ற முறையில் அரசாங்கம் மற்ற தொழில் அதிபர்களுக்கு எல்லாம் ஒரு எடுத்துக்காட்டாக இருக்கவேண்டும். அதிலும் தொழில் துறையில் மிக்க அனுபவம் பெற்ற அமைச்சர் அவர்கள் இந்த துறையில் பொறுப்பு ஏற்றிருக்கக்கூடிய முறையில் இவைகளை எல்லாம் அமுல் நடத்துவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. இதை அமுல் நடத்தினால் மற்ற இலாகாக்களுக்கு இந்த இலாகா ஒரு எடுத்துக்காட்டாக இருக்கும் என்பதை எடுத்துச்சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த இலாகாவைப் பார்க்கும்போது இப்போது ஒன்றல்ல, இரண்டல்ல—பல முறையில் சம்பள விகிதங்கள் இருக்கின்றன. ஒரே வேலையைச் செய்யக் கூடிய டிரைவர் சென்னையில் வேலை செய்தால், அவருக்கு 40 ரூபாய் முதல் 65 ரூபாய் வரை தரப்படுகிறது. அதே வேலையை செய்யக் கூடியவர் கன்னியாகுமரியில் இந்த இலாகாவின் கீழ் இருக்கக்கூடியவர்களுக்கு 50 ரூபாய் முதல் 100 ரூபாய் வரை கொடுக்கப்படுகிறது. அதைப் போலவே கண்டக்டர்கள். இங்கு கண்டக்டர்களுக்கு 30 ரூபாய் முதல் 45 ரூபாய் வரையில் கொடுக்கப்படுகிறது. அதே வேலையைச் செய்யக் கூடிய அங்குள்ள கண்டக்டர்களுக்கு சம்பளம் 40 ரூபாய் முதல் 80 ரூபாய் வரை இருக்கிறது. ஒரு கண்டக்டர் 10 மாதங்கள் கேரளாவிலிருந்து விட்டு இங்கு இருக்கிறார். அவர் சம்பளம் 50 ரூபாய் முதல் 100 ரூபாய் வரை இருக்கிறது. இத்தகைய முறை இருக்கக்கூடாது. ஒரு இலாகாவில் ஒரே முறை இருக்கவேண்டும். ஒரே முறை இருக்கவேண்டுமென்று சொல்லும்போது, நிச்சயமாகச் செய்து விடுகிறோம் என்று கன்னியாகுமரியில் இருப்பவர்களுடைய சம்பளத்தை இதைப் போலக் குறைத்து விடுகிறோம் என்று சொல்லமாட்டார்கள் என்று நினைக்கிறேன். அதுவும் நமது தொழிலமைச்சர் அவர்கள் நிச்சயமாகச் சொல்ல மாட்டார்கள் என்று நினைக்கிறேன். இங்குள்ளவர்களுடைய சம்பளத்தை உயர்த்தவேண்டும். அங்குள்ள ஸ்டாண்டர்டு—தரம்—கண்டக்டர்களைப் பொறுத்தவரையில், கல்வியிலும் சரி, மற்ற விஷயங்களிலும் சரி, தரம் உயர்ந்ததாக இருக்கிறது என்று கூறவேண்டும். ஆனால் டிரைவர்களைப் பொறுத்தவரையில் அப்படி இல்லை. கண்டக்டர்கள் படித்திருக்கிறார்கள். அவர்களெல்லோரும் ஒரே வேலையைச் செய்கிறார்கள். அவர்களுக்கு ஒரே விதமான சம்பளம் கொடுப்பதில் ஆட்சேபனை இருக்க முடியாது.

[Sri T. S. Ramaswamy Pillai] [25th March 1958

நம்முடைய டிரான்ஸ்போர்ட் இலாகாவைப் பொறுத்தவரையில் நான் காலையில் ஒரு அவசரக் கேள்விக்கு பதில் கொடுக்கும்போது அதை நன்றாக கவனித்தேன். டிரைவர் அவசியம் இல்லாமல் 97 பாஸஞ்சர்களை ஏற்றிக் கொண்டு வேகமாகப் போயிருக்கிறார் . . .

**The Hon. Sri R. VENKATARAMAN**: 87 தான், 97 அல்ல.

**Sri T. S. RAMASWAMY PILLAI**: 97 என்பது என்னுடைய தகவல். டிபார்ட்மெண்டில் 87 என்று கொடுத்திருக்கிறார்கள். டிபார்ட் மெண்டின் தகவல் டிரைவரையும் கண்டக்டரையும் சேர்த்து 89 என்பது. என்னுடைய தகவல் சரி என்று கருதுகிறேன். 97 பேர்களை ஏற்றிக் கொண்டு ஒரு பஸ்ஸில் ஓவர் ஸ்பீடில் போனார்கள். அந்த 97 பேரில் 87 பேர்கள் ஆஸ்பத்திரியில் இருக்கிறார்கள். 87 பேர்களை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனதில் 3 பேர்கள் உயிர்போயிருக்கிறது.

அடுத்தபடியாக இப்போது இவர்களுக்கு செக்யூரிடி ஆப் சர்வீஸ் கிடை யாது இங்கு சேர்ந்த பிறகு. முன்பு தொழிலாளர்களை வேலைக்கு எடுக்க வேண்டுமென்றால் நிச்சயமாக பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலமாக எடுக்க வேண்டும். இப்போது டிரான்ஸ்போர்ட் இலாகா எதைப் பின்பற்றுகிறார் கள். டிரான்ஸ்போர்ட் இலாகா சம்பந்தமாகப் பலவிஷயங்கள் இருக்கின் றன, அதற்கு பிற்பாடு வருகிறேன். இப்போது டிரான்ஸ்போர்ட் இலாகா தொழிலாளர்களைப் பொறுத்தவரையில் தொழிலாளர்களுடைய விஷய யத்தைப் பொறுத்தமட்டிலும் ஒரு சில விஷயங்களைக் கூறிவிட்டு முடித்துக் கொள்கிறேன்.

அங்கு பப்ளிக் ஸர்விஸ் கமிஷன் மூலமாக அவர்கள் தொழிலாளர் களைத் தேர்ந்தெடுப்பார்கள். ஆனால், இங்கு சேர்ந்த பின்னர் அதிகாரிகள் இஷ்டப்படி அதிகாரிகளுக்கு வேண்டுபவர்கள், வேண்டாதவர்கள் என்பதால் தொழிலாளர்கள் நிர்வாகத்தினருடைய தயவுக்குக் காத்திருக்கவேண்டுமே தவிர, அவர்களுடைய உரிமையை மனதில் இறுத்தி வேலை செய்ய முடி யாமல் இருக்கிறார்கள். ஆகவே நாம் ஒன்று பார்க்கிறோம். ஒரு ஷெட் யூல்டுகேஸ்ட் டிரைவர் இருக்கிறார். அவர்களுக்கு கொடுக்காமல் ஏதோ அன்றாடம் வேலை செய்யக்கூடிய ஒருவரை வைத்துக் கொண்டிருக்கிறார் கள். ஆகையால்தான் இத்தகைய நிலைமை ஏற்படுகிறது. டிரான்ஸ்போர்ட் இலாகாவிலே கூட செக்யூரிடி ஆப் ஸர்விஸ் வேண்டும். அவர்களுக்கு வேலை நிச்சயம் வேண்டும் என்று நான் கூற ஆசைப்படுகிறேன். ஒரே வேலைக்கு ஒரே சம்பளம் வேண்டும். ஒன்று பார்க்கலாம். இன்றைய தினம் நம்முடைய அரசாங்கத்திற்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. கேரள அரசாங்கத்திலிருந்து நம்முடைய அரசாங்கத்திற்கு எழுதிய ஒரு கடிதம் வந்திருக்கிறது. அதாவது 1954-ம் ஆண்டு முதல் சம்பளத்தை உயர்த்தி யிருக்கிறோம். அத்தகைய முறையில் உயர்த்தியிருப்பதால் அவர்களுக்கு அரியர்ஸை நாங்கள் 1956-ம் ஆண்டு நவம்பர் மாதம் 1-ம் தேதி வரையில் அந்தத் தொழிலாளர்களுக்கு சம்பளத்தை நாங்கள் கொடுக்கிறோம் என்று அங்கிருந்து வந்திருக்கிறது. சென்னை மாகாணத்திலுள்ளவர்களுக்கு நாங்கள் கொடுக்கிறோம் என்று வந்திருக்கிறது. இவர்கள், நீங்கள் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று எழுதியிருக்கிறார்கள். ஏனென் றால், அங்கு அதிகப்படுத்தினால், அதைத் தொடர்ந்து இங்கும் அதிகப்படுத்த வேண்டுமென்பதற்காக. அதிலும் நம் தொழிலமைச்சர் போன்றவர்கள் தலைமை தாங்கும்போது, அத்தகைய முறையை உடனடியாகக் கையாண்டு சென்னையிலுள்ள தொழிலாளர்களுக்கும் அரசாங்கம் உயர்ந்த ஊதி யத்தைக் கொடுக்கவேண்டுமென்று இந்த சமயத்திலே கூற ஆசைப்படு கிறேன்.

குறைந்த பட்ச சம்பளத்தைப் பற்றிய வரையில் பல நண்பர்கள் எடுத்துக் கூறினார்கள். விவசாயத் தொழிலாளர்களுக்கும், அதைப் போலவே நெச வுத் தொழிலாளர்களுக்கும் குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதை நான் மனப்பூர்வமாக ஆதரிக் கிறேன். அத்தகைய ஒரு நிர்ணயம் செய்வதற்கான முயற்சிகளைச் செய்ய வேண்டுமென்று மன்றாடிக்கேட்டுக் கொள்கிறேன்.

25th March 1958] [Sri T. S. Ramaswamy Pillai]

அதைப் போலவே உப்பளத் தொழிலாளர்களுக்கும் நிர்ணயிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்றைக்கு நம்முடைய ராஜ்யத்திலே எத்தனையோ ஆயிரக்கணக்கான உப்பளத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். கன்னியாகுமரியில் உப்பளத் தொழிலாளர்களுக்குக் குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயிக்க ஒரு கமிட்டி ஏற்பாடுத்தினார்கள். அந்தக் கமிட்டி இந்த பாஷா வாரி மாகாண அமைப்புக்கு 1, 2 மாதங்களுக்கு முன்னால், அமைக்கப்பட்டது. ஏனைய பகுதிகள் இங்கே சேர்ந்துவிட்டபடியால் கேரள சர்க்காரிலிருந்து இதை இங்கே மாற்றினார்கள். ஆனால், அந்தக் கமிட்டி கலைக்கப்பட்டுவிட்டது. மினிமம் வேஜஸ் ஆக்ட் ஷெட்யூலில் சேர்க்கவில்லை என்ற காரணத்திற்காக இதைக் கலைத்து விட்டார்கள். இதுவும் அந்த ஷெட்யூலில் சேர்க்கப்படவேண்டும். இத்தகைய பிரச்னையில் பல சிக்கல்கள் இருக்கலாம். விவசாயத் துறையைப் பொறுத்தவரையில் பல சிக்கல்கள் இருகின்றன. லேண்ட் டென்யூர் ஜில்லாவிற்கு ஜில்லாவித்தியாசமாயிருக்கிறது. பல சிக்கல்கள் வரலாம். இதையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரேமாதிரியாகக் கொண்டு வரவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்திலே கூறிக் கொண்டு, மீண்டும் ஒரு முறை அரசாங்க இலாகாவைப் பொறுத்த வரையில் தொழிலாளர்களுக்கும், இதன் ஸ்தாபனங்களைப் பொறுத்தவரையில் பிற அதிபர்களுக்கும் ஒரு எடுத்துக் காட்டாக இருந்தாலொழிய சட்டம் இயற்றி, சட்டத்தை அமுலாக்குவதிலே ஒரு பயனும் இருக்க முடியாது என்று கூறிக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : I shall give five minutes, if the hon. Member Sri K. S. G. Haja Sheriff can finish his speech within that time.

SRI K. S. G. HAJA SHERIFF : Mr. Speaker, Sir, I rise to speak in support of the Demand made by the Hon. Minister for Labour. Sir, I am greatly surprised when both the mover of the cut motion and other hon. Members spoke that the Government had not done or had not improved the conditions of labour within the last ten years and that the Government are more aligned towards the capitalists. I do not think that there can be any better false propaganda than this statement. I am sure that hon. Members are having each a copy of the small booklet supplied by the Government giving vividly what they have done to the labour within the last ten years, what their policy is, what they propose to do hereafter.

Sir, we are fortunately having in our midst a Minister who has devoted the best part of his life for the betterment of labour and who is wedded to improve their conditions.

Sir, if only I can give illustrations how the conditions of labour have been improved, I am sure the hon. Members would be taken by surprise. For instance, if we take a worker who is working in the ports, a worker who was earning Rs. 3 a day three or four years ago, is today earning Rs. 9 or 10 for working only a shift of eight hours. Can it not be said that his lot has been improved? I agree when hon. Members said that there was still unemployment, that there were considerable difficulties in finding employment for both the educated and uneducated people, etc., and that cannot be disproved. But so far as people who are employed in any sector, either in agriculture, or in factory or in business houses or ports, it is not correct to say that their conditions have not improved. Their conditions have definitely improved. The hon. Members have may give

[K. S. G. Haja Sheriff] [25th March 1958

concrete suggestions as to how to solve the unemployment problem or how to improve the conditions of these people, who are already working in all these factories or other business houses.

Sir, one of the reasons given for the food shortage is the increased consumption of food. But how has the increased consumption of food come about? It cannot be unless people had **improved** their purchasing capacity and is it not due to increased earnings and wages? Sir, it is also said that the Labour Housing Schemes have not been put forward. It is not correct, when it is said that the employers are not taking advantage of the facilities offered by the Government; let us take any factory, a cement factory in our State or a Sugar Factory or any factory that is either in the private sector or in the public sector, the first concentrated attempt is for the improvement of the condition of labour. So, labour conditions have improved a lot. I should not be mistaken as speaking on behalf of the capitalists. It is all due to the measures adopted by the Government and on account of the changed policy in the managements that the conditions of labour have improved very conspicuously.

I am sure, Mr. Speaker, that if only given concrete suggestions for the improvement of labour, the Government which are wedded to the policy of having a socialistic structure of society, will certainly do all they can for their betterment. Thank you, Sir.

12–10 p.m. **Sri P. S. CHINNADURAI** : மதிப்புற்குரிய சபாநாயகர் அவர்களே, நமது அரசியல் சட்டத்தில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளில் மிகவும் முக்கியமானது **" Right to work, Living wage "** என்ற இரண்டு விஷயங்கள் என்பதை முதல் முதலாக எடுத்துக்காட்டி இருக்கிறார்கள். வேலை செய்வதற்கான உரிமை, ஜீவன சம்பளம் பெறுவதற்கான உரிமை, இந்த இரண்டும் அரசியல் சட்டத்திலேயே ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதுதான் முதல் ஐந்தாண்டு திட்டத்தின் கொள்கையாகவும், இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் கொள்கையாகவும், ராஜ்ய சர்க்காரின் கொள்கையாகவும் இருந்து வருகிறது என்பதை சூசகமாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். இந்த உரிமைகள் இருந்தும், தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். ஆகையால் இந்தக் கொள்கை குறையுடையதா, இந்தக் கொள்கையை அமல் நடத்துகின்ற அரசாங்க நிர்வாக இயந்திரம் குறையுடையதா, அல்லது இந்த அமைச்சரவை குறையுடையதா என்று ஆராய்ந்து பார்க்க கடமைப்பட்டிருக்கிறோம்.

போடப்பட்டிருக்கிற கொள்கை குறையுடையது அல்ல. அரசாங்க நிர்வாகம் பொறுத்தவரை, இப்பொழுது தொழிலாளர் இலாகாவை நிர்வகித்து வரும் அதிகாரிகள், பாக்டரி இலாகாவை நிர்வகித்து வரும் அதிகாரிகள் எல்லா வகையிலேயும் திறமை உள்ளவர்கள் என்பதை என் அனுபவத்திலிருந்து நான் கூற முடியும். கனம் அமைச்சர் அவர்களைப் பற்றி சொல்ல வேண்டியது ஒன்றும் இல்லை. உண்மையிலேயே அமைச்சர் அவர்கள் எனக்கு மிகவும் பிடித்தமானவர். (சிரிப்பு.) நான் மற்ற மந்திரிகள் இருந்தாலும் இதைப் பற்றி குறிப்பிடுவேன். நான் ஏதோ அமைச்சரை காக்கா பிடிப்பதாக யாரும் நினைத்துக்கொள்ள வேண்டாம்; இதற்கு அவசியமும் இல்லை.

உண்மையிலேயே அரசாங்க நிர்வாக இயந்திரம் நன்றாக இருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் எல்லா காரியங்களையும் திறமையாகச் செய்யக் கூடியவர். கையாளப்படுகின்ற கொள்கையோ நல்லதாக இருக்கிறது. அப்படி இருந்தபோதிலும் என் குறை கூறப்படுகின்றது' என்பதை நாம்

25th March 1958] [Sri P. S. Chinnadurai]

பார்க்க வேண்டும். இன்றைய தினம் இருக்கும் அரசியல் பொருளாதார அமைப்பிலே முதலாளித்துவத்திற்குத்தான் அதிகப்படியான சலுகையும் உரிமையும் இருக்கின்றன. இன்றைய அரசியல் ஆதிக்கமானது எப்படியோ முதலாளித்தத்துவத்தின் கையிலே சிக்கிப்போய் கிடக்கிறது என்பதுதான் மிகவும் தெளிவாக தெரிகிறது. இதனால்தான் கனம் அமைச்சர் அவர்கள் சில காரியங்களை செய்ய வேண்டுமென நினைத்தாலும் அதை நடத்தி வைக்க முடியாத நிலையில் இருப்பதை நாம் அனுபவ ரீதியாக பார்க்கிறோம்.

உண்மையிலேயே கனம் அமைச்சர் அவர்கள் இத்தகைய ஒரு சந்தர்ப்பத்தில் அமைச்சர் பதவியை ஏற்றுக் கொண்டிருப்பது விதியின் கோளாறே என்றுகூட நான் சொல்வேன். அமைச்சர் அவர்கள் அந்த பதவியில் இருப்பதற்கு பதிலாக நம்முடைய தொழிற் சங்கத்திற்கு பலம் அளிக்கத் தக்க முறையில் ஒரு பெரிய கிளர்ச்சிக்காரராக இருப்பாரானால் அதை நான் மிகவும் சந்தோஷமாக வரவேற்பேன்.

வேலையில்லாத் திண்டாட்டத்தை எடுத்துக் கொள்வோம். இப்பொழுது வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தை ராஜ்ய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஆனல் 160,000 பேர்கள் விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், 24,000 பேர்களுக்கு வேலை தேடிக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது நம்முடைய திறமையை எடுத்துக் காட்டுகிறதா ? நாட்டிலிருக்கும் வேலை தேடித்தரும் ஸ்தாபனத்தை யாருமே மதிப்பது கிடையாது. ஆட்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்றால் இந்த வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தின் மூலமாகத்தான் ஆட்களை எடுக்க வேண்டும் என்ற நியதியை ஏன் ஏற்படுத்தக்கூடாது ? அப்படி ஏற்படுத்தும் விதியை ஏன் அமல் செய்யக் கூடாது. இதை அமல் செய்வதில் யார் தடையாக இருக்கிறார்கள் ? அவர்கள் யார் என்று தெரிவித்தால் அவர்களை தூக்கி எறிய தொழிலாளர்கள் காத்திருக்கிறார்கள், சமுதாயம் காத்துக்கொண்டிருக்கிறது என்பதை தங்கள் மூலமாக கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

ஏற்கனவே வேலையில் இருக்கின்ற தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட வரை அவர்கள் தங்கள் வேலையை இழக்காமல் இருப்பதற்கான நிலைமை இருக்கிறதா என்று பார்ப்போம். அங்கங்கு இருக்கும் தொழிற்சாலை நிர்வாகிகள் தொழிற்சாலைகளை மூடுவதற்கு ஏற்பாடு செய்கின்றனர் என்று புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. அவ்வாறு தொழிற்சாலைகளை மூடுவதற்கு திடீர் என்று என்ன ஏற்பட்டது என்று அரசாங்கம் ஒரு பத்திரிகை அறிக்கை ஒன்றை வெளியிட்டிருக்கிறார்கள். கோயம்பத்தூரில் இருக்கும் பஞ்சாலைகளைப் பற்றி இங்கே பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். கோயம்பத்தூர் பஞ்சாலைகளில் ஒரு ஷிப்டு குறைப்பதை நாம் குறிப்பாக கவனிக்க வேண்டும். தென் இந்திய மில் முதலாளிகள் சங்கம் உற்பத்தியை திட்டமிட்டு குறைப்பதற்கு என்ன வழி செய்யலாம் என்று தீர்மானிக்க ஆலோசனை பண்ணிக் கொண்டிருக்கிறது. திட்டமிட்டு உற்பத்தியைப் பெருக்குவதற்கு அல்ல. உற்பத்தியை பெருக்க வேண்டும் என்று நாட்டில் சொல்லிக்கொண்டு வருகின்ற நேரத்தில், இவர்கள் திட்டமிட்டு உற்பத்தியை குறைக்க வழி என்ன என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நாசகரமான வேலையை அரசாங்கம் ஒரு பத்திரிகை அறிக்கையால் தடுத்துவிட முடியும் என்று நினைக்கிறதா ? இந்த நாசகரமான வேலையை தடுப்பதற்கு வேறு வழியே கிடையாதா ? பத்திரிகை அறிக்கையிலும் என்ன சொல்லப்பட்டிருக்கிறது. சட்ட பூர்வமாக என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்யவேண்டும். நோட்டீஸ் கொடுக்க வேண்டும். நோட்டீஸ் கொடுக்காமல் ஆட்களை வேலையிலிருந்து நிறுத்தக்கூடாது என்று தான் போட்டிருக்கிறது. இந்த அறிக்கையை இந்த முதலாளிகள் பயன் படுத்திக்கொள்வார்கள். அரசாங்கமே பத்திரிகை அறிக்கையில் நோட்டீஸ் கொடுத்துவிட்டு ஆட்களை நிறுத்தி விடலாம் என்று சொல்லியிருக்கிறது என்று சொல்வார்கள். அரசாங்க அறிக்கையில் முதல் பாகத்தை அமல் நடத்தாமல் மற்ற பாகங்களை மட்டும் அமல் நடத்துவார்கள். ஆகையால் மில் முதலாளிகள் திட்டமிட்டு

[Sri P. S. Chinnadurai] [25th March 1958

உற்பத்தியை குறைப்பதற்கு வழி செய்வதை தடுப்பதற்கு, மிகக் கடுமையான நடவடிக்கைகளை எடுத்து அமல் செய்யவேண்டும் என்று ராஜ்ய அரசாங்கத்தைக் கோருவேன். அவ்வாறு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளாவிட்டால், தேசத்தின் உற்பத்தி பாதிக்கப்படும். வேலை செய்து கொண்டிருப்பவர்களுக்கு வேலையில்லாத நிலைமை ஏற்படும். ஆகையால் வேலை இல்லாத் திண்டாட்டம் அதிகமாக ஏற்படும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

பீடி தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணயம் செய்வதற்கு ஒரு கமிட்டியை நியமிக்கப்போகிறோம் என்று சென்ற வருஷத்தில் சொன்னார்கள். அப்படி நியமிப்பதாகவும் வாக்குறுதி கொடுத்தார் அமைச்சர். அந்த வாக்குறுதி இன்னும் நிறைவேற்றப்படவில்லை. அதைப்பற்றி கேட்டால் சீக்கிரம் செய்கிறோம் என்று கனம் மந்திரி அவர்கள் சொல்லுகிறார்களே தவிர என்ன செய்யப்போகிறோம் எப்பொழுது செய்யப்போகிறோம் என்று சொல்வதாகவே இல்லை. அவர் அப்படிச் சொல்லி ஒரு ஆண்டு கடந்து போய்விட்டது. இன்னும் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. அப்படி நிறைவேற்றாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? என்பதை அறிய விரும்புகிறேன். கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும்போது அதற்குள்ள காரணத்தையும் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

12-20 p.m. சம்பளம் நிர்ணயிப்பதைப்பற்றி, ஏற்கெனவே சம்பள போர்டு நிர்ணயம் செய்யப்பட்டதைப் பற்றி நமக்கு எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். பத்திரிகைகளுக்கு சம்பளம் நிர்ணயம் செய்யப்பட்டு அது கோர்ட்டுக்குச் சென்று அதன் முடிவு என்ன ஆயிற்று என்பது நமக்குத் தெரியும். அதைக் குறித்து பல அங்கத்தினர்கள் பல யோசனைகளைக் குறிப்பிட்டார்கள். சுப்ரீம் கோர்ட்டுக்கும் ஹைக்கோர்ட்டுக்கும் போகாத அளவில் நாம் தடைகளை விதிக்க வேண்டும் என்று யோசனைகளைச் சொன்னார்கள். சுப்ரீம் கோர்ட்டுக்கும் போகக்கூடாத அளவுக்கு ஏன் தடைகளை விதிக்கக் கூடாது என்றும் கேட்டார்கள். அப்படி தடை விதிக்க இயலுமா என்று பார்த்தால் அது இயலாது என்றுதான் சொல்லவேண்டும். ஜீவாதார உரிமை பிரகாரம் நிச்சயமாக அவர்கள் கோர்ட்டுக்குப் போகக்கூடியஉரிமை இருக்கிறது. இன்றைக்கு சுப்ரீம் கோர்ட்டிலும், ஹைகோர்ட்டிலும் நியமிக்கப்பட்டிருக்கூடிய நீதிபதிகளைப் பார்த்தால் அவர்கள் இன்றைய அரசியல் நிலைமையை உணர்ந்துகொண்டு அவர்கள் சோஷலிஸ சித்தாந்தத்துக்கு ஏற்ற மனப்பண்பு படைத்தவர்களாக இல்லாமல் இருக்கிறார்கள். அந்தக் குறையைத்தான் இது காட்டுகிறது. நாம் எவ்வளவோ திட்டங்களைப் போடலாம், எவ்வளவோ காரியங்களைச் செய்யலாம். செய்ய முடியும். ஆனால், நமது லட்சியங்களையும், திட்டங்களையும் புரிந்துகொண்டு செயலாற்றும் நீதிபதிகளும் நிர்வாகிகளும் தேவை. இன்றைய நீதிபதிகள் தங்கள் மனத்தை முற்போக்கான முறையில் மாற்றிக் கொள்ளத்தக்க முறையில் பொதுஜன நிர்பந்தம் உருவாகவேண்டும். இந்தப் பொதுஜன நிர்பந்தத்தை உருவாக்குவதில், இந்த தரப்பிலுள்ளவர்களோடு ஆளும் கட்சியில் உள்ள முற்போக்கு கொள்கை படைத்தவர்களும் ஒன்று சேர வேண்டும் என வேண்டுகிறேன்.

தொழிலாளர்கள் 55 வயதுக்கு மேல் வேலையை விட்டு விட்டுப்போக வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படி ஸ்டாண்டிங் ஆர்டர் இருக்கிறது என்றும் சொல்லுகிறார்கள். அப்படி தொழிலாளிகள் 55 அல்லது 58 வயதுக்கு மேல் வேலையை விட்டு விட்டுப் போனால் அவர்களுக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது. ப்ராவிடென்ட் பண்ட் திட்டம் அவர்களுக்கு இருக்கிறதா? இப்போழுதுதான் மூன்று அல்லது நான்கு வருஷங்களாக அந்தத் திட்டம் வந்து அமுலில் இருக்கிறது. இந்த ஐந்து வருஷத்தில் அவர்களுக்கு என்ன கிடைக்கப்போகிறது. அந்த பண்ட் இல்லாமல் இருக்கிறவர்களுக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது. அவர்களுக்கு கிராச்யுட்டி ஸ்கீம் இருக்கிறதா, அல்லது பென்ஷன் ஸ்கீம் இருக்கிறதா? அவர்களுக்கு சட்ட நுணுக்கங்கள் தெரியாத காரணத்தால் அவர்களை சுலபமாக வெளியே அனுப்புகிறார்கள். அதனால் 55 வயதுக்கு மேல் பட்டவர்களை

25th March 1958] [Sri P. S. Chinnadurai]

வேலையை விட்டு நீக்குவதாக இருந்தால் அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்க அரசாங்கம் முன் வரவேண்டும். 55 அல்லது 58 வயதுக்கு மேல்பட்டவர்களை வேலையை விட்டு நீக்குவதாக இருந்தால் அதற்காக ஒரு பென்ஷன் திட்டத்தை அமைக்க வேண்டும். அதற்கான ஏற்பாடுகளை அரசாங்கம் செய்ய முன் வர்வேண்டும். அதை அரசாங்கமே கொண்டு வந்தாலும் சரி அல்லது தொழிற்சாலை அதிபர்களைக் கொண்டு வரச்சொல்லி இந்த அரசாங்கம் அவர்களுக்கு சிபாரிசு செய்தாலும் சரி. இந்த திட்டத்தை தொழிலாளர்களுக்கு கொண்டு வர்வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதை யார் கொண்டு வந்து கொடுத்தாலும் தொழிலாளர்களுக்கு பென்ஷன் அல்லது கிராசுயுட்டி ஸ்கீமைக் கொண்டு வரவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

அநேகம் தொழிற்சாலைகளில் அநேகம் விபத்துக்கள் ஏற்படுகின்றன. அதற்கு அரசாங்கமும் காரணம் அல்ல, பாக்டரியும் காரணம் அல்ல. அதற்கெல்லாம் அங்குள்ள மானேஜ்மெண்டார் தான் காரணம். மானேஜ்மெண்டார் தொழிலாளர்களுக்கு சரியானபடி பாதுகாப்பு கொடுக்காமல் இருப்பதால்தான் இப்படிப்பட்ட விபத்துக்கள் அடிக்கடி ஏற்படுகின்றன. அதற்குக் காரணம் "பாலிசி அப் பர்சியுவேஷன்" தான். இதுதான், கவர்ன்மெண்ட்டின் கொள்கையாக இருக்கிறது. பாலிசி அப் பர்சுவேஷனிலேயே இருந்தால் "**It is equivalent to the policy of appeasement**" என்று சொல்வதற்கு முடியும். அவர்களே செய்வார்கள் என்று சொல்லிக்கொண்டிருந்தால் ஒருக்காலும் தொழிற்சாலை அதிபர்கள் செய்யவே மாட்டார்கள். அதனால் தான் **policy of punishment** வரட்டுமே என்று சொல்லுகிறோம். அப்பொழுது தெரியும் நிலைமை. இப்பொழுது எவ்வளவோ கேஸ்கள், புகார்கள் வருகின்றன. அவைகளில் தண்டிக்கப்பட்டவைகள் எவ்வளவு என்று பார்த்தால் ரொம்பவும் குறைவாகத்தான் இருக்கும். ஒவ்வொரு வருஷத்திலும் தண்டிக்கப்பட்ட எண்ணிக்கையைப் பார்த்தால் 400-க்கு குறைவாகத்தான் இருக்கும். ஆயிரம், அல்லது இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் கேஸ்கள் வந்தாலும் தண்டிக்கப்பட்ட எண்ணிக்கையைப் பார்த்தால் அது ரொம்பவும் குறைவாகத் தான் இருக்கும். அதனால் சரியான அளவில் தண்டிக்கப்பட வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்கு வேண்டியபடி சட்டத்தை திருத்தி அமைக்கும் படியாகவும் கேட்டுக்கொள்ளுகிறேன். மனது வைத்து சட்டத்தை திருத்தி அமைத்தால்தான் அது சரிவர அமுல் செய்யப்படும். அதை நல்ல முறையில் அமுல் நடத்துவதற்கான துணிச்சல் அந்த இலாகவிலுள்ள அதிகாரிகளுக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட அதிகாரிகளும் அந்த இலாகாவில் இருக்கிறார்கள் என்பதும் நன்றாகத் தெரியும். ஆகவே சட்டத்தை திருத்தி அமைக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் இருக்க வேண்டும் என்று அந்தக் கொள்கையை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்று சொல்லும்போது ஒரு தொழிற்சாலைக்கு ஒரு சங்கம் இருக்க வேண்டும் என்று தான் அர்த்தம். ஒரு தொழிற்சாலைக்கு ஒரு சங்கம் இருக்க வேண்டும். இதைப்பற்றிய ஒரு முடிவுக்கு அரசாங்கம் சீக்கிரமாக வர வேண்டும். இது சம்பந்தமாக திட்டவட்டமான ஒரு முடிவுக்கு அரசாங்கம் சீக்கிரம் வரவேண்டும் என்று நான் வேண்டிக்கொள்ளுகிறேன். அப்படி அரசாங்கம் வராத வரைக்கும் தொழிற்சாலைகளில் போட்டி சங்கங்கள் இருந்துகொண்டே தான் இருக்கும். பல சங்கத் தலைவர்கள் அங்கு தலையிட ஆரம்பிப்பார்கள். அதனால் பல கஷ்டங்கள் ஏற்படலாம். ஆகவே அரசாங்கம் சீக்கிரத்திலேயே இதற்கு ஒரு திட்ட வட்டமான முடிவு காணவேண்டும்.

அடுத்தபடியாக மெட்ராஸ் ஸ்டேட் இன்ஷுரன்ஸ் அட்வைசரி போர்டு என்று ஒன்று இருக்கிறது. கடைசியாக அந்த போர்டு 20–10–56-ல் தான் கூடிற்று. அதற்குப் பிறகு கூடவே இல்லை. அந்த போர்டு அடிக்கடி ஏன் கூடக்கூடாது என்று கேட்கிறேன். அந்த போர்டு அடிக்கடி கூடி

[Sri P. S. Chinnadurai] [25th March 1958

ஏன் ஆராய்ச்சி செய்யக்கூடாது என்று கேட்கிறேன். திட்டமான வேலை களை அமைத்து அதன்படி அவர்கள் அடிக்கடி கூடி ஏன் வேலை செய்யக் கூடாது. மாதக் கணக்கில் வருஷக் கணக்கில் அவர்கள் கூடுவது கிடை யாது. இப்படிப்பட்ட நிலைமை தவிர்க்கப்பட வேண்டும் என்று நான் வேண்டிக்கொள்ளுகிறேன்.

அதோடு, சுப்ரீம் கோர்ட்டுக்கும், ஹை கோர்ட்டுக்கும் முதலாளிகள் சுலபமாகப் போகிறார்கள். அப்படி தொழிலாளர்களால் போக முடிய வில்லை. அப்படிப் போவதற்கு தொழிலாளர்கள் பணத்துக்கு எங்கே போவார்கள். பணம் இல்லாத காரணத்தால் அவர்களால் அடிக்கடி கோர்ட்டுகளுக்குப் போக முடிவதில்லை. அடிக்கடி இது சம்பந்தமாக பேசப் படும்போது ஏதாவது யோசனைகளைச் சொல்ல வேண்டும் என்று சொல்லி யிருக்கிறார்கள். அதற்கு நான் ஒரு யோசனையைக் கூறுகிறேன். அதை அரசாங்கம் கவனிப்பார்கள் என்று நம்புகிறேன். லீகல் எய்ட் டிபார்ட் மெண்ட் என்ற ஒரு இலாகாவை அமைத்து அதன் மூலம் தொழிற் சங்கங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற யோசனையை நான் சொல்லு கிறேன். தொழிலாளர்கள் சுப்ரீம் கோர்ட்டுக்கோ அல்லது ஹை கோர்ட் டுக்கோ போக வேண்டும் என்று சொல்லி அவர்கள் இந்த இலாகாவை அணுகினால் அவர்கள் தொழிலாளர்களுக்கு உதவி செய்ய வேண்டும். சாதாரணமாக தொழிலாளர்கள் தனிப்பட்ட முறையில் ஒரு வக்கீலை நிய மிப்பது என்பது முடியாது. அவர்கள் தனிப்பட்ட முறையில் வக்கீலிடம் போகாமல் நேரடியாக அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட லீகல் எய்ட் டிபார்ட்மெண்ட்டுக்குப் போக வேண்டும் என்ற நிலைமையை ஏற்படுத்த வேண்டும் என்று அரசாங்கத்தை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால் ஓரளவுக்கு தொழிலாளர்களுக்கு உதவி புரிவதாக இருக்கும் என்பது என்னுடைய யோசனை.

தொழிலாளர்களுக்கு ஸ்டாம்பு கட்டணம் கட்டுவதிலிருந்து விதி விலக்கு அளிக்க வேண்டும் என்று நான் பல தடவை சொல்லிக்கொண்டு வந் திருக்கிறேன். இதை உடனடியாக கவனிக்க வேண்டும் என்று நான் அரசாங்கத்திற்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆகவே தொழிலாளர்கள் ஏதாவது மனுக்கள் கொடுத்தால் அதற்கு ஸ்டாம்பு கட்டணம் கட்டாமல் இருக்கும்படியாக ஒரு விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தொழிலாளர் இலாகா இப்பொழுது இருக்கின்ற நிலைமையில் திரம்பட வேலை செய்கிறது என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நாங்கள் எடுத்துக் காட்டிய கருத்துக்களை மனதில் வைத்துக்கொண்டு அந்த இலாகா தன்னுடைய நிர்வாகத்தை நல்ல முறையில் நடத்தினால் ஓரளவு தொழிலாளர்களுக்கு சௌகர்யமாக இருக்கும் அதன் மூலம் தொழி லாளர்களுக்கு நல்ல முறையில் சேவை செய்வதாக ஆகும், சேவை செய்ய வும் முடியும்.

போனஸ் சம்பந்தமாக ஒரே ஒரு வார்த்தையை மட்டும் சொல்லிக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். லாபம் இருந்தாலும், லாபம் இல்லா விட்டாலும் போனஸ் கொடுக்க வேண்டும் என்றும், அப்படிக் கொடுப்பது அநீதி என்றும் எனக்கு எதிர் தரப்பிலே பேசும்போது குறிப்பிட்டார்கள். ஆட்சியாளர்கள் தரப்பிலேயே இப்படி மாறுபட்ட கருத்துக்களை சொல்லிக் கொண்டு மோதிக்கொண்டார்கள். இப்பொழுது சோஷலிஸ அமைப்பில் ஆட்சியை நடத்துகிறார்கள். கேரளாவில் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சியை நடத்துகிறது. இதற்கு முன்னதாக திருவாங்கூரில் மிதவாத முற்போக்குக் கட்சியைச் சேர்ந்தவர் இருந்த காலத்தில் இதைப்பற்றி முடிவு செய்தார் கள். ஒருவர் வாங்கும் மொத்த சம்பளத்தில் 5 பர்செண்ட் வீதம் போனஸ் கொடுக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்தார்கள், லாபம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த போனஸ் கொடுக்க வேண்டும் அதன்படி ஏற்பாடு செய்தவர் ஸர் சி. பி. அவர்கள். அந்த காலத்தில் செய்யப்பட்ட ஏற்பாடு இப்பொழுதும் நடந்து கொண்டு வருகிறது. அதையே அபிவிருத்தி செய்வதற்கு இப்பொழுதுள்ள கேரள அரசாங்கம் ஏற்பாடு

25th March 1958] [Sri P. S. Chinnadurai]

செய்து கொண்டு வருகிறது. இப்படிப்பட்ட முற்போக்கான போனஸ் திட்டத்தை நம்முடைய ராஜ்யத்திலும் கொண்டு வரவேண்டும் என்று இந்த மந்திரி சபையைக் கேட்டுகொண்டு என்னுடைய வார்த்தைகளை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அடுத்து ஒரு வருஷத்தில் இந்த மான்யக் கோரிக்கையை வைத்துக் கொண்டு எப்படி நம்முடைய ராஜ்யத்தில் தொழில் அமைதியை பாதுகாக்கப் போகிறோம் என்று அமைச்சர் அவர்கள் சில அறிக்கைகளை நம் முன்னாலே சமர்ப்பித்திருக்கிறார்கள். ஆனால் அதே சமயத்திலே அவர்கள் பத்திரிகைக்கு ஒரு அறிக்கை விட்டிருக்கிறார்கள். இந்த இரண்டையும் ஒப்பிட்டு சேர்த்து பார்க்கும்பொழுது, அடுத்த ஒரு வருஷத்தில் நம்முடைய ராஜ்யத்தில் தொழிலாளர்கள், தொழில் இரண்டும் சம்பந்தப்பட்ட வரையில் எப்படி ஒரு நெருக்கடி வர இருக்கிறது என்கின்ற அபாயத்தை தான் நமக்கு உணர்த்தியிருக்கிறது. இந்த சூழ்நிலையிலே நான் அமைச்சர் அவர்களை பாராட்டுவதா, அல்லது பரிதாபப்படுவதா என்று தெரியாமல் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களை பாராட்டிவிடுவது சுலபம். ஆனால் தனி மனிதனுடைய நல்லெண்ணமும், திறமையும் ஓரளவுக்கு உபயோகப்படுமே தவிர, அது சூழ் நிலையை மாற்றுவதற்கு உபயோகப்படுமானால், அப்பொழுது தான் உண்மையான பரிகாரம் ஏற்படும். அத்தகைய சக்தி நமது அமைச்சர் அவர்களிடத்தில் இல்லையே என்று பரிதாபப்படுகிறேன். அவர்களிடையே இருக்கும் அதிகாரத்தை ஒழுங்காக பிரயோகிக்கலாம். நமக்கு சுலபமாக படிக்கக்கூடிய முறையில் அச்சடித்து அவர் அறிக்கைகளை வழங்கியிருக்கிறார். திறமை அதிகமாக இருப்பதினால் இத்தகைய வேலையைத் தான் செய்ய முடியுமே தவிர, சூழ் நிலையை மாற்றக்கூடிய சக்தி அவர்களிடத்தில் இல்லையே என்று தான் பரிதாபப்படுகிறேன். உண்மையிலேயே அவர்களுக்கு நல்லெண்ணம் இருக்கிறது. தொழில் அமைதி இருக்க வேண்டும். தொழிலாளர்கள் நன்றாக வாழ வேண்டும், தொழில் தகராறுகள் இருக்கக்கூடாது என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்கிறது. நம்முடைய சமுதாய அமைப்பில் தொழிலாளர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்றால், முதலாளிகளுக்கு கொஞ்சம் கஷ்டத்தை கொடுத்துத் தான் தீரவேண்டும். அந்த அளவுக்கு கொஞ்சம் சங்கடங்கள் ஏற்படத்தான் செய்யும். அப்படி வரக்கூடிய சமயத்தில் தான் எல்லோருடைய ஒத்துழைப்பும் மந்திரி அவர்களுக்கு தேவைப்படுகிறது. அமைச்சர் அவையிலுள்ள மற்ற அமைச்சர்களுடைய ஒத்துழைப்புக் அவர்களுக்கு வேண்டியிருக்கிறது. உதாரணமாக சேலம் டானரியில், நாராயணன் இண்டஸ்டிரீஸ் என்ற தொழிற்சாலையில் 150 தொழிலாளிகள் வேலை செய்கிறார்கள். அந்தத் தொழிற்சாலையை மூடி விட்டார்கள். அதைத் திறக்க வேண்டுமென்று தொழில் அமைச்சர் உத்தரவு போட்டார். போலீஸ் அமைச்சரின் கீழ் வேலை செய்யும் போலீஸ் அதிகாரிகள் அதை திறப்பதற்கு உதவி செய்வதற்கு பதிலாக, அந்தப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களை சிறையிலே போடுகிறார்கள். இம்மாதிரி சமயங்களில் உத்தரவுகளை அமுல் நடத்துவதற்கு மற்ற அமைச்சர்களுடைய ஒத்துழைப்பு ரொம்ப குறைவாக இருக்கிறது. தொழில் இலாகாவில் கடைசியிலே இருக்கும் லேபர் ஆபீஸர்களிலிருந்து காரியதரிசி வரை எல்லோரும் ஒத்துழைப்பு கொடுக்கவேண்டும். 12–30 p.m.

கடந்த ஒரு வருஷ காலத்தில் தொழில் இலாகாவில் பெரும் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் தயக்கமின்றி பாராட்ட கடமைப்பட்டிருக்கிறேன். லேபர் டிபார்ட்மெண்டு சுருசுருப்பாக வேலை செய்கிறது. சச்சரவுகள் இருந்தால் சமரசம் செய்வதற்கு தகுந்த நடவடிக்கைகளை எடுக்கிறார்கள். சமரசம் முறிந்தால் தகராறுகளை கோர்டுகளின் முடிவுக்கு விடுவதற்கும் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கிறார்கள். இதிலெல்லாம் முன்னேற்றம் இருக்கிறது என்பது ஒரு புறத்தில் வாஸ்தவம் தான். தொழில்கள் சம்பந்தப்பட்ட வரையில், தொழில் தகராறுகள் இல்லாமல் தொழில் துறையில் அமைதி நிலவுவதற்கு அமைச்சர் அவர்கள் தன்னுடைய சகாக்களின் ஒத்துழைப்பையும், மத்திய சர்க்காரின் ஒத்துழைப்பையும்

[Sri M. Kalyanasundaram] [25th March 1958

பெற்று வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். தொழில் தகராறுகள் இருக்க வேண்டுமென்பது தொழிலாளிகளின் விருப்பம் அல்ல. தொழில் தகராறுகளுக்கு பொறுப்பாளி தொழிலாளி அல்ல. தொழில் தகராறுகளை தீர்ப்பதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளுவதற்கும், தொழிலாளர்கள் சுமுகமாக வாழ்வதற்கும் தான் தொழிலாளர்கள் விரும்புகிறார்கள். தினம்தோறும் வேலை நிறுத்தம், போலீஸ் தடியடி இவைகளெல்லாம் நடைபெற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்ற நோக்கமல்ல தொழிலாளிகளுக்கு. ஆகையால் தொழில் தகராறுகள் வந்தால், தொழிலாளிகளைப்பற்றி குறை சொல்லுவதில் பிரயோசனமில்லை. தொழில் தகராறுகளுக்கு காரணம் என்ன என்பதை அமைச்சர் அவர்கள் மத்திய சர்க்காருக்கும் தன்னுடைய சகாக்களுக்கும் எடுத்துச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உதாரணமாக, பஞ்சு ஆலைகள் சம்பந்தமாக ஒரு நெருக்கடி வர இருக்கிறது என்பது பற்றி குறிப்பிட்டேன். எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் சின்னதுரை அவர்களும் இதை எடுத்துக் காட்டினார்கள். அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய அறிக்கையும் இதன் காரணமாகத் தான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். பி. அண்டு ஸி. மில்லில் ஒருவிதமான நெருக்கடியை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். மதுரை ஹார்வி மில்லில் ஒருவிதமான நெருக்கடியை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். சில ஷிப்டுகளை மூடவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். கோயம்புத்தூரிலும் சில ஷிப்டுகளை மூடவேண்டுமென்று ஏற்பாடு நடக்கிறது. நூல் மில்களிலும் சரி, நெசவு மில்களிலும் சரி, சில ஷிப்டுகளை மூடவேண்டுமென்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இந்த நெருக்கடிக்கு என்ன காரணம் என்பதை சற்று பரிசீலனை செய்து பார்த்து, இதைத் தவிர்ப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த நெருக்கடிக்குக் காரணம் நம்முடைய கோர்ட்டுகள் சர்க்காருடன் ஒத்துழைக்காமல் இருப்பது தான். சுப்ரீம் கோர்ட்டு, ஹைகோர்ட்டு தீர்ப்புகளை பார்த்தால் ஜனங்களுடைய உரிமையை பாதுகாக்கும் நோக்கத்தோடு அவைகள் கொடுக்கப்படவில்லை. தனி நபர்களுடைய உரிமைகளைத்தான் அவை பாதுகாக்கின்றன. விவசாயப் பிரச்னையாக இருந்தாலும் சரி, தொழில் பிரச்னையாக இருந்தாலும் சரி, இந்தத் தீர்ப்புகளை பார்க்கக்கூடிய நேரத்தில் தனி நபர் உரிமை தான் பெரியது, புனிதத் தன்மை வாய்ந்தது என்ற மனோபாவத்தோடு நம்முடைய நீதிபதிகள் தீர்ப்புகளை அளிக்கிறார்கள் என்று நினைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சர்க்காரின் கொள்கை என்ன, நமமுடைய தேசத்தின் நிலைமை என்ன, நம்முடைய தேசம் எந்த ஸ்திதியில் போய்க் கொண்டிருக்கிறது, சோஷலிஸ சமுதாயம் அமைப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது என்ற சூழ்நிலைகளையெல்லாம் நம்முடைய நீதிபதிகளும், நீதி ஸ்தாபனங்களும் புரிந்து கொள்ளவில்லை என்று தான் நினைக்க வேண்டியிருக்கிறது. கோர்ட்டுகளின் தீர்ப்புகள் இந்தக் கொள்கைகளுக்கு முரண்பட்டதாக இருக்கிறது என்பதை பத்திரிகைத் தொழிலாளர்களின் பிரச்னையில் சமீபத்தில் அளிக்கப்பட்ட தீர்ப்பு எடுத்துக் காட்டும். இதனால் பத்திரிகைத் தொழிலாளர்கள் மட்டுமல்ல, மற்ற தொழிலாளர்களும் பாதிக்கப்படுவார்கள். முதலாளிகளுக்கு சக்தி இருந்தால் தான் கொடுக்கலாம் என்று சொன்னால், உண்மையிலேயே சக்தி இருந்தால் கூட சக்தியை குறைத்துக் காட்டக்கூடிய சாமர்த்தியம் முதலாளிகளிடத்தில் இல்லையா? அதற்குத் தகுந்தபடி கணக்குகளை அவர்கள் தயார் செய்து காட்டிவிடுவார்கள். இனி மேலும் மேலும், பத்திரிகைத் தொழிலில் மட்டுமல்ல, மற்ற எல்லா தொழில்களிலும் அமைதியின்மையை ஏற்படுத்தும் ஒரு சூழ்நிலையை இந்த சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பு தெரிந்தோ, தெரியாமலோ ஏற்படுத்தி விட்டது என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பு வந்த பிறகு தான் கோவை மில் முதலாளிகளுக்கும், மதுரை மில் முதலாளிகளுக்கும் எங்களுக்கு சக்தி இல்லை, வருமானம் இல்லை என்று கணக்கு தயார் செய்துகொண்டு சில ஷிப்டுகளை மூடப்போகிறோம் என்று சொல்லும் துணிவு ஏற்பட்டிருக்கிறது. அதற்கு முன்னால் கொஞ்சம் அவர்கள் யோசனை செய்து கொண்டு

25th March 1958] [Sri M. Kalyanasundaram]

தான் இருந்தார்கள். அவர்கள் நிர்ப்பந்தமாக இப்பொழுது சில ஷிப்டு களை மூடப்போகிறோம் என்று சொல்லுவதற்கு சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பு தான் உதவி செய்திருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். அமைச்சர் அவர்கள் எவ்வளவு திறமையாக வேலை செய்தபோதிலும் சரி, இந்த சூழ்நிலையை எப்படி மாற்றுவது என்பது பற்றி அவர்கள் யோசனை செய்யவேண்டும். பஞ்சாலை நெருக்கடி சம்பந்தப்பட்ட மட்டில், மத்திய சர்க்கார் மில்துணி மீது விதிக்கக்கூடிய வரிக்கு சலுகை கொடுத்தார்கள் அம்மாதிரி சலுகை கொடுத்தது நியாயமா, அநியாயமா என்பது ஒரு பக்கத்தில் இருக்கட்டும், அந்த அளவுக்கு துணி விலை குறைந்தால் நல்லது தான். துணி விலை குறையவேண்டுமென்பது தான் நம்முடைய நோக்மும். விலைவாசிகள் குறையவேண்டுமென்பது தான் எல்லோருடைய விருப்பமும். மத்திய சர்க்கார் ஒரு நல்ல காரியத்தை செய்யும்பொழுது, அதனால் வேறு ஏதாவது தீமை ஏற்படுமா என்பதை சிந்தனை செய்யாமலே, முடிவு எடுத்து காரியங்களை செய்கிறார்கள். இதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை, பாதகங்களை தடுக்கக்கூடிய முறையில் நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். மத்திய சர்க்காரின் முடிவை வரவேற்க முடியாத நிலையில் ஏன் இருக்கிறேன் என்றால், இதனால் கைத்தறி பாதிக்கப்பட்டால் அவர்களுக்கு கவலையில்லை. கைகத்தறிக்கு கொடுக்கப்பட்ட ரிபேட்டை குறைத்த போதே மில் முதலாளிகளின் நிர்ப்பந்தத்தின் பேரில் அப்படிச் செய்திருக்கலாம் என்று சூசமாக அப்பொழுது சொன்னேன். இப்பொழுது உண்மையாகவே அந்த நிர்ப்பந்தத்தின் காரணமாகத் தான் கைத்தறிக்கு கொடுத்து வந்த ரிபேட்டை குறைத்திருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. மில் துணிக்கு சலுகை கொடுக்கக்கூடாது என்ற கருத்தல்ல. ஆனால் கைத்தறிக்கு கொடுத்து வந்த பழைய ரிபேட் தொகையையாவது கொடுத்திருக்க வேண்டும். கைத்தறி துணி நிறைய தேங்கியிருக்கிறது. இதனால் கைத்தறி துணி நமது ராஜ்யத்தில் மேலும் அதிகமாக உற்பத்தியாகக் கூடிய நிலைமையில் இல்லை. இதற்குக் காரணம் துணி உற்பத்தி சம்பந்தமாக நூல் உற்பத்தி சம்பந்தமாக மில் சம்பந்தமாக மத்திய சர்க்கார் கடைப்பிடிக்கும் கொள்கை தான். இது விஷயத்தில் மத்திய சர்க்கார் பொறுப்பற்ற முறையில் நடந்து கொண்டிருக்கிறது என்பதை பல முறை சுட்டிக்காட்டியிருக்கிறேன். ஒரு தொழிற்சாலையில் 1,200 1,500 "ஸ்பிண்டில்கள்" வைத்து வேலை செய்யக்கூடிய ஒரு மில்லை புதியதாக நம்முடைய ராஜ்யத்தில் புகுத்தியிருக்கிறார்கள். இதற்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டிய அவசியம் என்ன? இம்மாதிரி நெருக்கடியான சமயத்தில் இப்படிப்பட்ட ஒரு புது மில்லுக்கு லைசென்ஸ் அளிக்கவேண்டிய காரணம் என்ன? 30 பஞ்சாலைகள் அதிகரித்திருந்தும், மொத்தமாக வேலை செய்யக்கூடிய தொழிலாளிகளின் எண்ணிக்கையில் 28,000 குறைந்திருக்கிறது. மந்திரி அவர்கள் கொடுத்த அறிக்கையிலேயே நான் இதை காண்கிறேன். மத்திய சர்க்கார் லைசென்ஸ் கொடுக்கக்கூடிய லட்சணத்தைப் பாருங்கள். உத்தியோக வசதியை வளர்ப்பதற்கு பதிலாக, உத்தியோக வசதியை குறைக்கக் கூடிய கொள்கையைத் தான் மத்திய சர்க்கார் கையாண்டு வருகிறது. இதற்கு எதிராக அமைச்சர் அவர்கள் உறுதியாக போராடினால் தான், பரிகாரம் ஏற்படும். இல்லாவிட்டால், ஒரு வருஷத்தில் பஞ்சாலைகள் சம்பந்தப்பட்ட வரையில், கைத்தறி சம்பந்தப்பட்ட வரையில் ஒரு நெருக்கடி ஏற்படத்தான் செய்யும். அப்பொழுது நண்பர் ஏழுமலை அவர்கள் சொல்லியதுபோல் இந்த சட்ட சபையிலே காரசாரமான விவாதம் நடப்பதை பார்க்கலாம். இந்த மான்யத்தின் மீது அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய புள்ளி விவரங்களே இந்த நிலைமையை எடுத்துக்காட்டுகிறது என்பதை நான் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த சமயத்தில் சிலயோசனைகளையும் நான் சர்க்காருக்குச் சொல்ல விரும்புகிறேன். விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதற்கு நம் உணவு அமைச்சரோ மத்திய சர்க்கார் அமைச்சர்களோ எதுவும் செய்யவில்லை. விலைவாசிகள் இன்னும் உயர்ந்துக்கொண்டேதான் இருக்கின்றன. உணவுப் பொருள்களின் உற்பத்தி பெருகியிருக்கிறதென்று கனம் அமைச்சர் சொன்னார். ஆனால் விலைவாசிகள் உயர்ந்துகொண்டேதான் இருக்கின்றன. ராஜ்ய சர்க்கார் தங்களுடைய புள்ளி விவரங்களை அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஷெட்யூல்களைக் கொண்டு தயாரித்திருக்கிறார்கள். அதுவும் 12–40 p.m.

விலைவாசிகள் உயருவதைத் தான் காண்பிக்கிறது. விலைவாசிகள் உயரும்போது தொழிலாளிகள் எப்படி அமைதியுடன் இருக்க முடியும்? ஆகவே விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இப்போதைய "கன்சிலியேஷன்" நிர்வாகம் அதிக வேலைகளைச் செய்து வருகிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், அதே சமயத்தில் சில பிரச்சினைகள் தீர்க்கப்படுவதில் காலதாமதம் ஏற்படுகிறது என்று குறிப்பிட விரும்புகிறேன். இதற்குக் காரணம் லேபர் ஆபீஸர்களின் பற்றுக்குறை என்று நான் அபிப்பிராயப்படுகின்றேன். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு லேபர் ஆபீஸர் வேண்டும். கோயம்புத்தூர், மதுரை ஜில்லாக்களுக்கு தேவையானால் அதிகமான லேபர் ஆபீஸர்களை நியமிக்கலாம். தொழில் தகராறுகள் தீர்க்கப்படுவதில், தொழிலாளர்களும் முதலாளிகளும் பரஸ்பரம் பேச்சுவார்த்தை நடத்திக்கொள்வதற்கு சமரஸ நடவடிக்கையில் வாய்ப்பு அளிக்கவேண்டியது அவசியம் என்று கனம் அமைச்சர் சொல்லியிருக்கிறார். ஒரு இடத்தில் தகராறு இருந்தால் அதை சமரஸமாக தீர்த்து வைப்பதற்கு சமரஸ அதிகாரி அங்கே வந்த மூன்று வாரங்களுக்குப் பிறகு தான் கூட்டத்தை நடத்த முடிகிறது. அதுவரையில் தொழிலாளிகளையும் முதலாளிகளையும் கூட்ட முடியவில்லை. சமரஸ அதிகாரிகள் அந்த அந்த இடங்களுக்கு அவ்வப்போது செல்ல முடிவதில்லை. ஆகவே போதிய சமரஸ அதிகாரிகளை நியமிக்க வேண்டும்.

மணப்பாரை தியாகராய மில்லில் பஞ்சப்படியை 8 மணி நேர வேலைக்கு 3 அணு என்று நிர்ணயித்தார்கள். 6 மணி நேரம் வேலை செய்தால் அந்தத் தொகை குறைக்கப்படும் என்றும் அந்த மில்காரர்கள் சொன்னார்கள். இந்த விஷயத்தில் அரசாங்கத்தார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. குலசேகரபுரத்தில் இரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் 2,000 பேர் இருக்கிறார்கள். அவர்கள் $11\frac{1}{2}$ அணு வீதத்தைக் கேட்டார்கள். ஆனால் $9\frac{1}{2}$ அணு தான் கொடுக்கப்போவதாகச் சொல்கிறார்கள். அந்தத் தகராறு என்னவாயிற்று என்று தெரியவில்லை. மேலும், பாலகிருஷ்ணண் அண்ட் பிரதர்ஸ் மோட்டார் தொழிற்சாலையில் ஒரு தகராறு இருக்கிறது. அந்தத் தகராறு பற்றி புகாருக்கு மேல் புகார் வருகிறது. முதலாளிகளிடம் தொழிலாளர்கள் புள்ளி விவரங்கள் கேட்கிறார்கள். அவர்கள் புள்ளிவிவரங்கள் கொடுக்க மறுக்கிறார்கள். அவர்களுக்கு போதிய சம்பளம் கொடுக்கவும் மறுக்கிறார்கள். இந்தத் தகராறுகள் மிகமிக மோசமாகி வருகின்றன. இந்தத் தகராறுகள் சம்பந்தமாக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்களோ, தெரியாது. தகராறுகளை அவ்வப்போது கவனித்துத் தீர்த்துவைப்பதற்காக அதிக லேபர் ஆபீஸர்களை நியமிக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது தொழில் தகராறுகளைத் தீர்த்துகொள்வதற்காக கோர்ட்டுக்குப் போவது அதிகமாகிவிட்டது. சட்டரீதியாக நடவடிக்கை எடுக்கப்படாமல் இருந்தபோது தொழிலாளர்களுக்குள் ஒற்றுமை இருந்தது. சட்டப்படி தொழிற் சங்க இயக்கம் நடக்க வேண்டுமென்று முறை வந்த பிறகு தொல்லைகள் அதிகமாகி தொழிலாளர்களுக்குள் ஒற்றுமை நீங்க ஆரம்பித்தது. இப்போது கோர்ட்டுகளுக்குப் போவதால் தொழிளாலர்கள் அதிகமாக எதையும் சாதித்துக் கொள்ள முடிவதில்லை. கோர்ட்டுகளில் நிறைய வழக்குகள் நடந்தால் தம் இலாகாவிற்கு நிறைய வருமானம் வரும் என்று வருவாய் அமைச்சர் நினைக்கிறார். சக அமைச்சரே தொழில் அமைச்சரின் நற்காரியங்களுக்கு முட்டுக்கட்டையாக இருக்கிறார். மனுக்களை சமர்ப்பிக்கும்போது ஸ்டாம்பு வாங்கி ஒட்ட வேண்டியிருக்கிறது. முன்பெல்லாம் 5 ரூபாய் எடுத்துக்கொண்டு கஜனாவிற்கு போனால் மனுவை சமர்ப்பித்துவிடலாம். இப்போது அதிகப் பணம் கொண்டுபோக வேண்டியிருக்கிறது. மனுவின் மேல் ஒரு ரூபாய் ஸ்டாம்பு ஒட்ட வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. தொழில் தகராறுபற்றிய மனுக்களுக்காவது, மனுவின் மேல் ஸ்டாம்பு ஒட்டவேண்டிய விதியினின்றும் விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

25th March 1958] [Sri M. Kalyanasundaram]

மேலும் இப்போது தொழிற் சங்கத்தினர் எழுதும் கடிதங்களுக்கு தொழில் இலாகாவிலிருந்து பதிலே வருவதில்லை. தற்செயலாக எப்போதாவது பதில் வருகிறதே தவிர, சாதாரணமாக பதில் வருவதில்லை. இதை என் சொந்த அனுபவத்திலேயே பார்த்திருக்கிறேன். தமிழ் நாடு தொழிற்சங்கத்தின் நிர்வாக தலைவராக நான் இருக்கிறேன். தமிழ் நாடு தொழிற் சங்கத்தில் அதிகமான தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அந்தச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ சர்க்கரை செட்டியார். அதன் நிர்வாகத் தலைவராக நான் இருக்கிறேன். இந்த சபையின் அங்கத்தினராகவும் நான் இருக்கிறேன். நான் எழுதும் கடிதங்களுக்கே நூற்றுக்கு ஒன்றிற்காவது பதில் வந்திருக்கிறது என்று நான் நிச்சயமாகச் சொல்லமுடியாது. பதில் எழுதுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது. சமரசம் செய்து வைப்பதில் கஷ்டம் இருக்கலாம். உடனுக்குடன் பதில் எழுதுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது? இலாகாவில் போதிய உத்தியோகஸ்தர்கள் இல்லையென்றால், வேண்டிய குமாஸ்தாக்களையோ மற்ற உத்தியோகஸ்தர்களையோ நியமித்து, உடனுக்குடன் பதில் எழுத செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சில மசோதாக்களைக் கொண்டுவருவதாக கனம் அமைச்சர் வாக்குறுதி அளித்திருந்தார். தொழிற் சங்கங்களுக்கு அங்கீகாரமளிப்பது சம்பந்தமானது ஒரு மசோதா. தொழிற் சங்கங்கள் அங்கீகரிக்கப்படவேண்டுமென்ற முறை இருந்தால்தான் தொழிலாளர்களுக்குள் ஒற்றுமை ஏற்படும். தொழிலாலர்களுக்குள் ஒற்றுமை இல்லாதிருப்பதற்குக் காரணஸ்தர்கள் தொழிலாளர்களோ அரசியல் கட்சியினரோ தான் என்று கூறுவதை நான் மறுக்கிறேன். தொழிலாளர்கள் வேறுபட்ட அரசியல் கருத்துகள் கொண்டவர்களாக இருக்கக்கூடும். அதன் காரணமாக அவர்களிடையே பிளவு ஏற்படுவதில்லை. இப்போது முதலாளிகள் நல்ல பலமான தொழிற் சங்கங்களுக்குப் போட்டியாக சில சங்கங்களை அமைக்கிறார்கள், முதலாளிகள் தங்கள் கையாட்களைக் கொண்ட போட்டிச் சங்கங்களை அமைக்கிறார்கள். இதன் காரணமாகத்தான் தொழிலாளர்களுக்குள் இருக்கும் ஒற்றுமை கெடுகிறது. ஆகையால் சில நிபந்தனைகளுக்குட்பட்டுத் தான் தொழிற்சங்கங்கள் அமைக்கப்படவேண்டும் என்று விதிக்கும் மசோதாவைக் கொண்டுவருவது மிகவும் அவசியம். அந்த மசோதாவை சீக்கிரம் கொண்டுவர வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். கடை சிப்பந்திகள் சம்பந்தப்பட்ட மசோதாவைக் கொண்டுவர வேண்டுமென்று சொன்னால், மத்திய சர்க்கார் அதைக் கொண்டுவரப்போவதாக இராஜ்ய சர்க்கார் சொல்கிறார்கள். இராஜ்ய சர்க்காருக்கு அந்த அதிகாரத்தைக் கொடுத்துவிட்டதாக மத்திய சர்க்கார் சொல்கிறார்கள். அந்த மசோதாவும் எப்போது வரும் என்று தெரியவில்லை. பீடி தொழிலாளர்களுக்கான மசோதா வெளியிடப்பட்டிருக்கிறது. அதைக் கூட சட்டமாக்கவில்லை. சபையின் இந்தக் கூட்டம் முடிவதற்குள்ளாகவாவது அதைச் சட்டமாக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். அதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து அனுமதி வரவில்லை என்று சொல்லப்படுகிறது. (குறுக்கீடு) வந்துவிட்டால் ரொம்ப சந்தோஷம். தொழிற்சாலைகளில் விடுமுறை தினங்களை நிர்ணயிக்கப்பட வேண்டும். முக்கியமாக எல்லாத் தொழிற்சாலைகளினும் மே தினத்திற்கு விடுமுறை கொடுக்கப்படவேண்டும். அது போன்ற முக்கியமான மற்ற தினங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கு விடுமுறை கொடுக்க வேண்டும்.

இப்போது தொழிற்சாலைகள் சரிவர "இன்ஸ்பெக்ட்" பண்ணப்படுவதில்லை. "பாக்டரி இன்ஸ்பெக்ஷன்" மிகவும் மோசமாக நடத்தப்படுகிறது. இதன் காரணமாகத் தான் தொழிற்சாலை விபத்துக்கள் அதிகமாகி வருகின்றன என்றுகூடச் சொல்லுவேன். சிறிய தொழிற்சாலைகளைப் பொறுத்த வரையில் கொஞ்சம் அனுதாபத்துடன் நடந்துகொள்ள வேண்டுமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அவைகளைப் பொறுத்த வரையில் தவறுக்குப் பொறுப்பானவர்களை "ப்ராஸிக்யூட்" பண்ண வேண்டாம். தொழிலாளர்கள் முன்னிலையில் தொழிற்சாலைகள் பார்வையிடப்படுவதில்லை

ஆயில் மில்கள், அரிசி மில்கள் போன்ற சிறிய தொழிற்சாலைகளில் இன்ஸ்பெக்ஷன் சரியாக நடப்பதில்லை. எல்லாத் தொழிற்சாலைகளிலும் இன்ஸ்பெக்ஷன் நடக்கச்செய்வதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மோட்டார் தொழிலாளர்களின் நியாயமான சம்பளத்தை நிர்ணயிப்பதற்கு "வேஜ் போர்ட்" அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

12-50 p.m. *THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மாய்யக் கோரிக்கை மீது பங்கெடுத்துக் கொண்ட கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் எனது நன்றியை முதலில் தெரிவித்துக்கொள்கிறேன். கடந்த வருஷத்திலே இவ்விலாகா எந்த முறையில் நடந்துகொண்டது, அதில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் என்ன, அதில் இலாப நஷ்டங்கள் என்ன என்பதையெல்லாம் நன்றாக விவாதிப்பதற்காக ஒதுக்கப்பட்ட தினம் இதுவாகும். அந்த முறையிலேதான் இதில் தவறுகள் இருந்தாலும் சரி, அல்லது போற்றக்கூடிய அம்சங்கள் இருந்தாலும்சரி, எல்லாவற்றையும் கனம் அங்கத்தினர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த அறிக்கையைத் தயாரித்து சர்க்கார் வெளியிட்டிருக்கின்றது.

இந்த அறிக்கையிலே எல்லாம் பாராட்டுதற்குரிய விஷயங்களைச் சொன்னதாக நினைத்து கனம் சின்னதுரை அவர்கள் என்னிடம் கேட்டார்கள். "ஒரு இலட்சம் 60 ஆயிரம் பேர்கள் வேலை வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்க, இருபத்து நான்கு ஆயிரம் பேர்களுக்குத் தான் வேலை தேடிக் கொடுக்கப்பட்டிருக்கிறது, இது என்ன பெருமையாக அச்சடித்து வெளியிட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். இது ஆண்டு அறிக்கை. இருக்கிற நிலைமையை, உள்ளது உள்ளவாறு எடுத்துச் சொல்வதற்காக எழுதப்பட்டது. குறைபாடுகள் இருந்தால் அவைகளையெல்லாம், உங்களுக்குப் புள்ளி விவரம் கிடைக்காது என்ற காரணத்தால், சர்க்காரே எடுத்துக் காட்ட வேண்டுமென்ற நோக்கத்துடன் செய்யப்பட்டது. நாட்டில் இருக்கும் நிலைமையை தெளிவுபடுத்துகிற முறையிலே தான், இன்றைக்கு வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் அதிகமாக இருக்கிறது என்று காட்டுகிற முறையில் தான் இது எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

அதே முறையில்தான் விபத்து கூட அதிகமாக இரண்டு வருஷ காலமாக ஏற்பட்டிருக்கிறது என்று சொல்கிறபோது, அதற்கு கனம் அங்கத்தினர்கள் கவனம் செலுத்தவேண்டும். இதை வெளிப்படையாகக் கூறுவதன் மூலமாக முதலாளிகள் தங்களுக்குள்ள பொறுப்பை உணர்ந்து கொள்ள வேண்டும். அதே சமயத்தில் நிர்வாகத்திலே இருக்கும் உத்தியோகஸ்தர்களும் இதில் கவனம் செலுத்தவேண்டும். இதற்கெல்லாம் மேலாக தொழிற்சங்கத் தலைவர்களாக இருக்கிறவர்கள் இவ்வாறு விபத்துகள் ஏற்படும் காலத்திலே அக்கறையுடன் அவைகளைச் சர்க்காருக்கு எடுத்துக் காட்டி, சுட்டிக்காட்டி, எந்தெந்த முறையிலே அவற்றையெல்லாம் தவிர்க்க முடியும் என்று யோசனை கூற வேண்டும் என்பதற்காகத் தான் இதையும் வெளியிட்டிருக்கிறோம்.

1958–59-ம் வருஷத்திலே என்ன செய்ய இருக்கிறது என்பதை மாத்திரம் நான் முதலில் சொல்லிவிட்டு, அதன் பிறகு பல்வேறு யோசனைகள் கூறியது சம்பந்தமாக என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க முன் வருகிறேன்.

1958–59-ல் முக்கியமாக இந்த ஒட்டல் தொழிலாளர் சட்டம் நிறைவேற்றப்படும். காலதாமதம் ஆனதற்குக் காரணம் நம்முடைய சட்ட சபையில் இருக்கும் பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி அதற்கு நேரம் ஒதுக்காததுதான் என்பதை நான் மிகத் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பீடித் தொழிலாளர் சட்டம் பிரசுரிக்கப்பட்டுவிட்டது. அதை ஒரு ஆலோசனைக் குழுவுக்கு விடவேண்டுமென்பது சர்க்காருடைய அபிப்பிராயம். ஆகவே, அதையும் இந்த சட்டசபைக் கூட்டம் முடிவதற்கு முன்னால் சபை முன் வைத்து, அதை ஆலோசனைக் குழுவுக்கு விடுவதற்கான ஏற்பாடுகள் செய்ய சர்க்கார் உத்தேசித்திருக்கிறது.

25th March 1958] [Sri R. Venkataraman]

இப்பொழுது மகப்பேறு காலத்திலே பெண் தொழிலாளர்கள் அடைகிற சலுகைகள் மிகக் குறைவாக இருக்கின்றன. அவைகளைப் பெருக்குவதற்கான சட்டத்தை, அதாவது **Maternity Benefits Act** என்ற சட்டத்தை மேல் சபையில் நிறைவேற்றியாய்விட்டது. அதுவும் கூடிய சீக்கிரம் இந்தச் சபையில் நிறைவேற்றப்படும். அதன் மூலமாக, மகப் பேறு காலத்திலே நம்முடைய நாட்டிலே இருக்கும் பெண் தொழிலாளர் களுக்குச் சலுகை அதிகமாக்குவதற்கும் அவர்களுக்கு அதிக நாட்களுக்கு இந்த வசதிகள் அளிப்பதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக, நாட்டில் இருக்கும் தொழிலாளர்கள் பலருக்கு தேசீய விடுமுறை நாட்கள் என்று இல்லை. பலம் பொருந்திய தொழில் ஸ்தாப னங்கள் ஓரளவு ஒப்பந்தங்கள் மூலமாக, கோர்ட் தீர்ப்புகள் மூலமாக அவற்றைப்பற்றி சில முடிவுகள் பெற்றிருக்கிறார்கள். பொதுவாக, பாக் டரிகளில் வேலை செய்கின்றவர்களுக்கு இந்தச் சலுகை இல்லை என்ற காரணத்தினால் அவர்களுக்கு ஏழு நாட்கள் குறைந்தபட்சம் கொடுக்க வேண்டும் என்ற சட்டத்தையும் கொண்டுவருவதற்கு முன் வந்திருக்கிறது.

"பீடித் தொழிலாளர்களுக்குக் கூலி நிர்ணய போர்டு அமைப்பதில் ஏன் காலதாமதம்?" என்று கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்கள் கேட்டார்கள். கூலித் தகராறைத் தீர்ப்பதற்கு போர்டு நியமிப்ப தாகச் சொன்னவுடனேயே பல இடங்களிலே பெரிய தகராறுகள் ஏற்பட்டு பாக்டரிகள் எல்லாம் மூடும் நிலைமை உண்டானதால், முதலில் அதனைச் சமாளிப்பதற்கான நிலைமை ஏற்பட்டது. அவைகளையெல்லாம் நியாயமான முறையில் கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டு தீர்ப்புகளும் இப்பொழுது வந்து விட்டன. ஆகையால், இப்பொழுது சீக்கிரமாக இந்தக் கமிட்டி அமைக்கப் படும். அமைக்கப்படுகிற கமிட்டி கூட, கோர்ட்டுக்கு தீர்ப்புகளின் அடிப்படை யிலேயே அவர்களுடைய காரியங்களைச் செய்வதற்கும் உதவியாக இருக்கும். நம்முடைய இராஜ்யத்திலிருக்கும் எம்ப்ளாயிஸ் ஸ்டேட் இன்ஷ்யரன்ஸ் திட்டத்தை இப்பொழுது நமது இராஜ்யத்தில் சில பகுதிகளில்தான் விஸ்தரித்திருக்கிறோம். பல பகுதிகளில் இன்னும் விஸ்தரிக்கப்படவில்லை. 1,500 தொழிலாளர்களுக்கு மேற்கொண்டு எல்லா இடங்களிலும் எம்ப்ளாய்ஸ் ஸ்டேட் இன்ஷ்யரன்ஸ் திட்டம் விஸ்தரிப்பதென்று சர்க்கார் முடிவு செய்திருக்கிறது. அதையும் மத்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டுவிட்டது.

சமீபத்தில் கோவையில் நடந்த மகாநாட்டில் எம்ப்ளாயிஸ் ஸ்டேட் இன்ஸ்ஷ்யரன்ஸ் திட்டம் சம்பந்தமாக முதலாளிகள் பிரதிநிதிகளும், தொழிற்சங்கப் பிரதிநிதிகளும் கலந்துகொண்டு, அதை விஸ்தரிக்கப் படாத இடங்களுக்குத் துரிதமாக விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கு இணங்கும் குடும்பங்களுக்கு விஸ்தரிக்கிற காலம் சற்று தாமதம் ஆனாலும், அதற்காக காத்திருக்கத் தேவையில்லை என்று நமது இராஜ்யத்தில் விஸ்தரிக்கப்படாத இடத்திற்கு முதலில் விஸ்தரிக்கவேண்டுமென்பது முடிவு. அவ்வாறு நாம் விஸ்தரிப்புச் செய்யும் போது இந்திய நாட்டிலேயே இந்த இராஜ்யம் ஒன்றில்தான் எல்லாத் தொழிலாளர்களுக்கும் எம்ப்பிளாயிஸ் ஸ்டேட் இன்ஷ்யரன்ஸ் திட்டம் விரிவடையப்பட்டிருக்கிறதென்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக, சில முக்கியமான அம்சங்களை நான் எடுத்துக் காட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். நண்பர் அன்பழகன் அவர்கள் சொன்னார்கள்— "1954-ம் வருஷத்திலிருந்து 1956-வருஷம் வரையிலும் கூலி உயர்வு 689-லிருந்து 1,016 ஆக உயர்ந்திருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் ஏற்பட்ட வாழ்க்கைச் செலவுப் புள்ளியினுடைய உயர்வானது இந்தப் புதிய அளவுக்கு இருக்கிற கூலி ஓரளவு உண்மை அல்ல என்று நிரூபிக்கும்" என்று சொன்னார்கள். நான் புள்ளி விவரங்கள் சேகரித்து வைத்திருக் கிறேன். 1954வது வருஷத்தில் சென்னையில் வாழ்க்கைச் செலவுப் புள்ளி 341. 1956வது வருஷத்தில் 358. ஆகவே 17 புள்ளிகள் தான் உயர்ந்திருக்கிறது. ஆனால், கூலி விகிதம் 690 இலிருந்து 1,016 ஆக உயர்ந்திருக்கிறது.

[Sri R. Venkataraman] [25th March 1958

இதுபோல், கோயம்புத்தூரை எடுத்துக்கொண்டாலும் 391 இலிருந்து 413 ஆகத்தான் உயர்ந்திருக்கிறது. மதுரையில் 346 இலிருந்து 356 ஆகத்தான் உயர்ந்திருக்கிறது. ஆகவே, ஓரளவுக்கு இந்தத் தொழிலாளர்களுக்கு, பாக்டரிகள் சட்டத்தின்கீழ் வந்து Payment of Wages Act இன்படி இருக்கும் தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் தாழ்மையாமத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அது அவர்களுக்குப் போதும் என்று நான் சொல்லவில்லே. மேற்கொண்டு கூலி உயர்த்துவதற்கு அவர்கள் கேட்கக்கூடாது என்ற நோக்கத்தோடு சொல்லவில்லே. நாம் எந்த அளவு முன்னேறியிருக்கிறோம் என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும். அதே சமயத்தில் நாம் எந்த அளவுக்கு முன்னேற வேண்டுமென்று தெரிவித்துக்கொள்ளும் முறையிலே சொல்லுகின்றேன்.

**Sri M. KALYANASUNDARAM:** நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய பட்ஜெட் உரையில் சொல்லக்கூடிய சமயத்தில் மொத்த விலேவாசி (Wholesale Price) 1956-ல் 377 ஆக இருந்து இப்பொழுது 508 ஆக உயர்ந்திருக்கிறது என்று கூறினுர்கள். அப்படியிருக்கும்போது, வாழ்க்கைப் புள்ளி மட்டும் இந்த அளவுக்கு மட்டும் தான் உயர்ந்திருக்கிறது என்று சொல்வதிலுல் ஏதோ மாறுபாடு இருப்பதாகத் தெரிகிறது. வாழ்க்கைப் புள்ளி தயாரிக்கும் இலாகாவின் வேலேயைக் கொஞ்சம் பரிசீலனே செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN:** Cost of living index தயார்செய்கின்றபோது எந்த அளவுக்கு உணவு உபயோகப்படுகிறது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஒருவருடைய வாழ்க்கைச் செலவில் சுமார் 40 சதவிகிதம் தான் உணவு. ஆகவே, 508 ஆக உயர்ந்திருந்தபோதிலும், அதில் 40 சதவிகிதம் தான் வாழ்க்கைத்தர உயர்வுக்கு சதவிகிதமாக எடுத்துக்கொண்டு கணக்குப் போடப்படும். உணவுப் பொருள்களுடைய விலேவாசி ஓரளவு உயர்ந்திருக்கலாம். வேறு பொருள்களுடைய விலேவாசி ஓரளவு குறைந்திருக்கலாம். ஆகவே, ஒரு இடத்திலே உயர்வு ஏற்பட்டு மற்ற இடத்தில் குறைவு ஏற்படும்போது அதையெல்லாம் சராசரியாகப் போட்டுத்தான் Cost of living Index அதாவது வாழ்க்கைச் செலவு புள்ளி தாயர் செய்யப்படுகிறது. ஆகவே, இதில் முறண்பாடு இருப்பதற்கு இடம் இல்லே. அடுத்தபடியாக நான்
1 p.m. முக்கியமாக எடுத்துக் காட்ட வேண்டிய விஷயம் நம் இராஜ்யத்தில் பெரிய அளவுக்குத் தொழில் தகராறுகள் கோர்ட்டுகளுக்குச் செல்லாமல் நேரிடையான சமரசப் பேச்சின் மூலமாகவும், சர்க்கார் ஏற்படுத்தியிருக்கிற கன்ஸிலியேஷன் ஆபீஸர் மூலமாகவும் முடிந்திருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன். கடந்த வருஷத்தில் 248 வேலே நிறுத்தங்கள்—கதவு அடைப்புகள்—நமது இராஜ்யத்தில் வந்தன. இருபத்தெட்டு கேஸ்கள் நேரிடையாக சமரஸமாகிவிட்டன. நூற்றுமுப்பத்திரெண்டு சர்க்கார் கன்ஸிலியேஷன் ஆபீஸர் மூலமாகத் தீர்க்கப்பட்டிருக்கிறது. கோர்ட்டுக்கு என்று சென்ற தகராறுகள் மிகவும் சொற்பம் தான் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். யாராவது இந்த நிர்வாகம் வந்த பிறகு சர்க்கார் துறையில் நமக்கென்ன என்ற கவலேயற்ற முறையில் கோர்ட்டுக்கு எல்லா வழக்குகளேயும் விட்டுவிட்டார்கள் என்ற குற்றச்சாட்டைச் சொல்வதற்குக் கொஞ்சங்கூட இடம் இல்லே என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக நம்முடைய இராஜ்யத்தில் இருக்கிற கோர்ட்டுகளில் பெண்டிங்காக இருக்கக்கூடிய வழக்குகள் எவ்வளவு என்று பார்க்கும் போது நமக்கு மிகவும் மகிழ்ச்சி தரும் அளவுக்குக் குறைந்திருக்கிறது என்று தெரிவித்துக் கொள்கிறேன். 1958-ம் வருஷம் பிப்ரவரியில் சென்னேயில் உள்ள கோர்ட்டில் பெண்டிங்காக இருக்கக் கூடிய வழக்குகள் 31. மதுரையில் 19. கோயமுத்தூரில் எப்போதும் அதிகமான தகராறுகள் இருக்கக்கூடிய இடமாக இருந்தாலும் கூட முக்கியமாக பஞ்சாலேத் தொழில் மாத்திரம் அல்ல தோட்டத் தொழிலில், இருக்கக் கூடிய தகராறுகளேயும் அந்தக் கோர்ட் தீர்க்க வேண்டியதாக இருக்கிறது. என்றுலும் கூட அங்கே பெண்டிங்காக இருக்கக் கூடிய வழக்குகள் 10 தான் என்று சொன்னுல் அதைப்பற்றி நாம் பெருமை அடையாமல் இருக்க முடியாது.

25th March 1958] [Sri R. Venkataraman]

இந்த நிலைமைக்குக் காரணம் சர்க்கார் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது. சர்க்கார் அப்படி நினைக்கவில்லை. இந்த நிலைமைக்குக் காரணம் பெரிய அளவுக்கு முதலாளியும், தொழிலாளர்களும் ஒத்துழைத்து அவர்களுக்குள் விட்டுக்கொடுக்கும் மனோபாவத்துடன் சமரசம் செய்து கொள்ள வேண்டும் என்று எழுந்திருக்கிற விருப்பமும் அல்லது சர்க்கார் கன்ஸிலியேஷன் ஆபீஸர் சொல்கிற முடிவையாவது ஏற்றுக்கொண்டுவிட வேண்டும் என்கிற மனோபாவமும் தான் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இது நீடிக்கவேண்டும். நீடிக்கும் என்றே நான் எதிர்பார்க்கிறேன் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய பாராட்டுதலை முதலாளிகள், தொழிற் சங்கத் தலைவர்கள் ஆகிய இருசாராருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். 1-00 p.m.

அடுத்தபடியாக நாம் முக்கியமாக கவனிக்கவேண்டியது ஒன்று. வீடு கட்டும் திட்டத்தில் நாம் பெரிய அளவுக்கு முன்னேற்றம் அடையா விட்டாலும் நமக்குக் கொடுக்கப்பட்ட தொகை அளவுக்கு வீடுகளைக் கட்டி முடித்திருக்கிறோம். அடுத்த வருஷத்திற்கு 1,100 வீடுகள் திருச்சி ஜில்லாவில் வளவனூர், விருதுநகர், சிங்கநல்லூர், கெண்டி, செம்பியம் போன்ற இடங்களில் கட்டுவதற்குத் திட்டம் வகுத்திருக்கிறோம். அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது.

இந்த விவாதத்தில் கலந்துகொண்ட பல அங்கத்தினர்கள் பல பிரச்சனைகளைப் பற்றி விரிவாக பேசினார்கள். அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்வதற்குப் பதிலாக சில தலைப்பின் கீழ் எடுத்துச் சொன்னால் சுலபமாக அதிலுள்ள நிலைமைகளைப் புரிந்துகொள்ளக்கூடிய முறையில் சொல்லிவிடலாம் என்று நினைக்கிறேன். ஆகவே சில தலைப்பின் கீழ் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

முதலாவது சென்னை ராஜ்யத்தில் ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் தான் என்பதாகச் சட்டம் நிறைவேற்றவேண்டுமென்று சொன்னார்கள். ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்று சொல்கிறபோது அதன் உட்கருத்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும். பஞ்சாலைத் தொழில் என்றால் அதற்கு ஒரு சங்கம் என்று அர்த்தமா அல்லது மீனாட்சி மில்லுக்கு ஒரு சங்கம், ஹார்வி மில்லுக்கு ஒரு சங்கம் என்று அர்த்தமா? இப்படி இருந்தால் ஒவ்வொன்றுக்கும் ஒரு சங்கம் என்று ஏற்படுமானால் ஒரே விதமான விகிதங்கள், ஒரு தலைப்பாடு அவர்களுடைய வாழ்க்கை வசதிகள் இவைகள் எல்லாம் இருக்க இயலாது. கடந்த கால மேல் நாடுகளின் அநுபவத்தை எடுத்துப் பார்க்கும்போது ஒரு விதமான தொழிலுக்கு ஒரே சங்கம் வைத்துக்கொண்டு அத்தொழில் சம்பந்தமாக எழுகிற தகராறுகளை எல்லாம் தீர்த்து இருக்கிறார்கள். அதுவன்றி தனித்தனியாக வைப்பதனால் பல்வேறு சங்கடங்கள் ஏற்படுகிறது.

அடுத்தப்படியாக தொழிற்சங்கத்தை அங்கிகாரம் செய்ய வேண்டும் என்று சொல்கிறபோது 15 சத வீதம் தொழிலாள அங்கத்தினர்கள் இருந்தால் அங்கீகரிக்கவேண்டும் என்று சொல்கிறார்கள். அதைக் கடந்த சென்னை ராஜ்ய ஆலோசனை போர்டில் வைத்து விவாதித்ததில் 80 சத விகிதம் 85 சத விகிதம் அங்கத்தினர்களைக் கொண்ட பெரிய சங்கங்கள் எல்லாம் இன்றைக்கு இருக்கும்போது 15 சத விகிதம் அங்கத்தினர்கள் கொண்ட சங்கத்தையும் அங்கீகாரம் செய்யலாம் என்றால் போட்டி சங்கங்கள் இல்லாத இடத்தில்கூட போட்டிச் சங்கங்கள் வைப்பதற்கான நிலைமை ஏற்படும். பலவித சங்கடம் உண்டாகிவிடுமோ என்று சொன்னார்கள். ஆகவே இதுவிஷயமாக முடிவான அபிப்பிராயத்தை யாருடைய நன்மைக்காகச் செய்கிறோமோ அவர்களைக் கலந்து கொண்டே செய்ய வேண்டும் என்பதற்காக அடுத்து வருகிற கூட்டத்திற்கு சென்னை ராஜ்ய தொழில் ஆலோசனை போர்டு கூட்டத்திற்கு ஒத்தி வைத்திருக்கிறோம் அதைச் செய்யும்போது அதில் ஏற்படுகிற சிக்கல்கள், அதனால் ஏற்படுகிற விளைவுகள் எல்லாவற்றையும் நன்றாக ஆராய்ந்து செய்ய வேண்டியிருப்பதால் அவசரப்பட்டு இதில் ஒன்றும் செய்ய இடம் இல்லை. ஆகவேதான், சர்க்கார் எவ்வளவு இஷ்டப்பட்டு இந்தச் சட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென்று விரும்பினாலும் இதுவரையில் முடிவான

[Sri R. Venkataraman] [25th March 1958

அபிப்பிராயத்திற்கு வரமுடியவில்லை. இந்த விஷயத்தில் தொழிற்சங்க தலைவர்கள் எல்லாம் ஆழ்ந்து பரிசீலனை செய்து தங்கள் அறிவின் இறுதி முடிவைக் கொடுப்பார்கள் என்று நினைக்கிறேன். அவர்களுடைய அனுபவத்தை ஒட்டி இதை நன்றாக ஆலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தப்படியாக தோட்டத் தொழிலாளர்கள் சம்பந்தமாக ஸ்ரீ மாதா கௌடர் அவர்கள் பேசினார்கள். இது சம்பந்தமாக சில சரித்திர நிகழ்ச்சி இருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்னால் அகில இந்திய, சர்வ தேசத் தொழிலாளர் மகாநாட்டில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு தொழிலாளர்களுடைய நிலைமையைப் பரிசீலனை செய்தபோது தோட்டத் தொழிலில் ஈடுபட்டிருக்கிற கங்காணி முறை மிகவும் கேவலமானது அதை ஒழித்து விடவேண்டுமென்று தீர்மானம் செய்தார்கள். கங்காணி என்று சொல்கிறபோது இரண்டுவிதமான நபர்கள் அவ்வாறு சொல்லப்படுகிற ஒரு பெயரின் கீழ் வருகிறார்கள். ஒன்று ஆட்களை மாத்திரம் சேகரித்துக் கொடுத்துவிட்டு கமிஷன் வாங்கிக்கொண்டு போகிறவர்கள் ஒரு சாரார். இரண்டாவது ஆட்களைச் சேகரித்து கொடுத்து அவர்களுடன்கூட இருந்து வேலை செய்து மேற்பார்வை பார்க்கிறவர்கள். ஆகவே கங்காணி என்று பொதுவாகச் சொல்லிவிட்டால் பெரிதும் குழப்பம் ஏற்படுகிறது. ஆட்களைத் தேடிக் கொடுத்து மேற்பார்வை பார்த்து அவர்களுடனேயே வேலை செய்யக்கூடியவர்களை ஒழிக்கக்கூடாது. அவர்களுக்குத் திட்டவட்டமாக—நிரந்தரமாக—வேலை கிடைக்கும்படி செய்ய வேண்டும் என சென்னை சர்க்கார் முடிவு செய்து இது விஷயமாகப் பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன. அந்த ஒரு சாராருக்கு நிரந்தரமான வேலை கிடைக்கவேண்டும், அவர்களுக்கும் கூலி நிர்ணயம் செய்யவேண்டும், அவர்களும் இந்தத் தொழிலில் ஈடுபடுவதற்குரிய நிலைமையை உண்டாக்க வேண்டுமென்பது சர்க்காரின் நோக்கம். அதற்காக இந்த வருஷம் மே மாதத்தில் முக்கூட்டு மகாநாடு கூட்டுவதாக முடிவு செய்திருக்கிறது. அப்படியே செய்வார்கள் என்று நினைக்கிறேன். மேலும் சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். வெளியார் எல்லோரும் தொழிற் சங்கத்தைவிட்டு வெளியே போய்விட்டால் எந்த விதமான தொந்தரவும் இருக்காது என்பதாக. இது பழைய காலப் பிரச்சனை. 1926–ம் வருஷத்தில் இந்திய தேசீய தொழிற் சங்கச் சட்டத்தைக் கொண்டு வரும் போது வெளியார்கள் இருக்கலாமா, இருக்கக்கூடாதா என்ற பிரச்னை மிகவும் பலமாக எழுந்தது. ஆனால் தனி நபர்கள் அபிப்பிராயத்தைச் சொல்வதற்குப் பதிலாக 1930–ம் வருஷம் ராயல் கமிஷன் ஆப் லேபர் செய்த முடிவுப் பிரகாரம் அந்தப் பிரச்சனை பரிசீலனை செய்து பார்த்த போது தொழிலாளர்களே தலைவர்களாகக் இருக்கவேண்டுமென்று சொல்கிற வாதம் சரியல்ல, அவர்களை மிரட்டவோ, பயமுறுத்தவோ, மாற்றவோ முதலாளிகளால் முடியும் என்று சொல்லப்பட்டது.

ஆகவே, இதில் அவர்கள் அவ்வாறு செய்யும்பொழுது, தொழிலாளர்களையே தலைவராக வைத்துக் கொண்டிருப்பது முடியுமா என்று பார்க்க வேண்டும். சமீபத்தில் ஆசிய தொழிலாளர்கள் மகாநாடு ஒன்று டெல்லியில் கூடிற்று. அதில், நம்முடைய இந்தியன் யூனியனில் இருக்கிற சட்டம் 1926ம் தொழிற்சங்க சட்டப்படி பாதி மடங்கிற்கு மேல் வெளியார் இருக்கக் கூடாதெனபதை அவர்கள் ஆட்சேபித்தார்கள். வெளிநாடுகளில் இருந்து வந்த தொழிற்சங்கத் தலைவர்கள், யார் தொழிற்சங்கத் தலைவராக இருக்க வேண்டுமென்று சொல்வது சர்க்காருக்கோ முதலாளிகளுக்கோ என்ன உரிமையிருக்கிறது. அவர்கள் இஷ்டப்படித் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லி அந்த காரணத்தினால் நாம் இயற்றிய சட்டம் சரி என்று ஏற்றுக்கொள்ளவில்லை. கன்வென்ஷனுக்கு ஒப்பாதது என்று அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே, திடீரென்று இதுபற்றி ஒரு முடிவு செய்வது சரியல்ல. ஆலோசித்துத்தான் செய்யவேண்டும். பின், குறைந்த பட்ச கூலி பலயிடங்களிலும் நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டது. அவற்றுள் சிலவற்றிற்கு இப்பொழுதே குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யப்பட்டுவிட்டது. முக்கியமாக, தோல் பதனிடும் தொழிலுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

25th March 1958] [Sri R. Venkataraman]

இன்னும் இதர தொழில்களுக்கும், வீடு கட்டும் தொழிலுக்கும் கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. உப்பளம் அடுத்தபடியாக விவசாயத் தொழிலாளர்கள் இவர்களுக்கு கூலி நிர்ணயம் செய்யப்படவில்லை. உப்பளம் சம்பந்தமாகவும், விவசாயத் தொழிலாளர்கள் சம்பந்தமாகவும் சர்க்கார் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. விவசாயத் தொழிலாளர்கள் சம்பந்தமாக நம் சட்டசபையிலேயே இருவித அபிப்பிராயங்களைக் கேட்டோம். ஒன்று, குறைந்த கூலியிருக்கிற இடத்திலாவது நாம் குறைந்தபட்சகூலித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். அதன் மூலம் குறைவாக சம்பளம் வாங்குகிறவர்கள் ஓரளவு நன்மையடைய வேண்டும் என்பது. மற்றொன்று, குறைந்த பட்ச கூலியை வளம் உள்ள பிரதேசங்களாக பார்த்து அமுலுக்குக் கொணடு வர வேண்டுமென்று சொன்னார்கள். இதற்கு முன் சென்னை ராஜ்ய சர்க்கார் குறைந்த பட்ச கூலி சிலயிடங்களிலாவது கொண்டு வர வேண்டுமென்று நோட்டிபிகேஷன் போட்டபோது பலதரப்பட்ட அபிப்பிராயங்கள் சொல்லப்பட்டதால் முடிவு எடுத்துக்கொள்ள முடியாத நிலையில் அது ஒத்தி போடப்பட்டது. இன்று நாம் குறைந்த பட்ச கூலி விவசாயத் தொழிலாளர்களுக்கு நிர்ணயம் செய்யவேண்டுமென்ற கொள்கையை ஏற்றுக்கொள்கிறோம். அதை எந்த முறையில் செய்தால் எவ்வாறு பரிசீலனை செய்தால் அதை அமுல் நடத்தமுடியும் என்பதை நாம் ஆராயவேண்டும். சட்டங்கள் இயற்றினால் மட்டும் எல்லாச் சலுகைகளும் எல்லோருக்கும் கிடைக்கப் போவதில்லை. எந்தெந்த இடங்களில் சட்டங்கள் சரியாக அமுல் நடத்தப்படவில்லை என்று அதிகாரிகள் கண்காணித்து விடுவார்கள் என்பது முற்றிலும் சரியல்ல. என்னை ஒருவன் அடித்து விட்டால், இன்டியன் பீனல் கோட் பிரகாரம் நான் கோர்ட்டில் தாவா கொடுத்தால்தான் அவர்கள் அந்த ஆளை பிடிப்பார்களேயல்லாது பீனல் கோட் தானாகவே ஆளை பிடிப்பதில்லை. ஆகவே, தொழிற்சங்கங்கள் பலமாக வளர்ச்சி அடைந்தால்தான், எந்தெந்தயிடங்களில் சட்டங்கள் கொண்டு வந்து சலுகைகள்கொடுக்க வேண்டுமென்று நினைக்கிறோமோ அந்தயிடங்களில் அவர்கள் சலுகை பெற சாத்தியமாகும். ஒரு நோட்டிபிக்கேஷன் மூலம் விவசாயத் தொழிலாளர்களுக்கு இன்னின்ன கூலி குறைந்தபட்சம் கொடுக்கவேண்டுமென்று சொன்னால் அதெல்லாம் உடனடியாக நிறைவேறிவிடும் என்று நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. ஆகவே, சர்க்கார் குறைந்த படச கூலி நிர்ணயம் செய்ய முயற்சி செய்து கொண்டிருக்கையில், அத்தொழிலில் அக்கரை உள்ளவர்கள் விவசாயத்தொழிலாளர் சங்கங்கள் அமைத்து அதன் மூலம் அவர்கள் கண்காணிப்பாக இருக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று நான் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, நெய்வேலியில் எம்ப்ளாய்மெண்ட் எக்ச்சேன் மூலம் ஆட்கள் எடுக்கப்படவில்லை என்று புகார் சொல்லப்பட்டது. அதற்கு, எனக்கு கிடைத்திருக்கிற தகவல் டெக்னிக்கல் பெர்ஸனல் தொழில்நுட்பம் உள்ளவர்களை, ஒரு கமிட்டிப் போட்டு எடுக்கிறார்கள். பின், க்ளெரிக்கல் வேக்கன்ஸீஸ் போன்றவைகளுக்கெல்லாம் கடலூர் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் மூலம் எடுப்பதாக எனக்கு தகவல் கிடைத்துள்ளது. மேற்கொண்டும் அவர்களிடமிருந்து தகவல் வரவழைத்தும் பார்க்கிறேன். அடுத்தபடியாக, ஒரு முக்கிய பிரச்னை சம்பந்தமாக சில விஷயங்கள் குறிப்பிட நான் விரும்புகிறேன். நண்பர் பழனிசுவாமி அவர்கள் என் இந்த எலெக்ட்ரிசிட்டி தொழிலாளர்களுக்கு உடனடியாக கோர்ட் அமைத்து கொடுக்கவில்லை என்று கேட்டார்கள். சட்டபூர்வமாக பப்ளிக் யூட்டிலிட்டி சர்வீஸில் தொழில் தகராறு ஏற்பட்டவுடன் அதை கட்டாயம் கோர்ட்டிற்கு விட வேண்டுமென்று சட்டம் இருக்கிறது என்று சொன்னார்கள். அவர்கள் கூறியது அவ்வளவு சரியல்ல என்று நான் முதலில். தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அது என் வாதம், முடிவல்ல இந்த எலெக்ட்ரிஸிட்டி தொழிலாளர்கள் பிரச்னையானது, நீண்டகாலமான ஒரு பிரச்னையாகும். அந்தத் தொழிலாளர்கள் பலதரப்பட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்களில், டெம்பரரி, காஷ்வல், என். எம். ஆர்., ஒ. என். எஸ். என்று எத்தனையோ வித்தியாசமிருக்கிறது. இதுவரையில் அவர்களது தொழிலாளர் தலைவர்கூட, முன்னேற்றம் காண வேண்டுமென்று நினைத்தவர்கள், பொதுவாக இண்டஸ்ட்ரியல் வொர்க்கேர்ஸ் எந்த முறையில் பலனடைந்திருக்கிறார்களோ அந்தமாதிரியான முறையை விரும்பவில்லை. என். ஜி. ஒக்கள் என்ற முறையில் என்னென்ன சலுகைகள்

1–10 p.m.

[Sri R. Venkataraman] [25th March 1958

கிடைக்கும் என்று அந்த விதமான முன்னேற்றத்தைக் காணவேண்டு மென்று முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இவ்வளவு சிக்கல்கள் அடங்கிய பிரச்னையை நேரிடையாக விட்டுத் தீர்க்கவேண்டுமென்று நான் ஒரு முடிவிற்கு வந்தால் பல தீர்ப்புகளிலும், அனுபவம் இல்லாத, தொழில் நுணுக்கம் தெரியாதவர்கள் தவறான தீர்ப்பு கொடுத்துவிட்டு அதன் காரணமாக தொழில் தகராறு தீருவதற்குப் பதிலாக புதுத் தொழில் தகராறுகள் ஏற்பட்டு விடுமோ என்று பயந்து அதற்காக சர்க்கார் ஒரு நெகோஷியேடிங் கமிட்டி, ஏற்படுத்த முன் வந்தோம் நேரடியாக சமரசம் செய்து கொள்ள இரு தரப்பிலும் உள்ளவர்கள் அங்கத்தினர்களாக இருப்பார்கள். அதற்காக, லேபர் கமிஷனர் அவர்களையும் சேர்மனைகப் போட்டு ஒரு கமிட்டி கொடுக்கிறோம் என்று சொன்னோம். அப்படிச் சொன்னது, சர்க்கார் ஏதோ காலதாமதம் செய்ய வேண்டுமென்று அபிப்பிராயம் கொண்டல்ல. உண்மையாகவே, எலெக்டிரிஷிட்டித் தொழிலாளர்களின் பிரச்னைகளை நல்ல முறையில் சுமுகமாக எப்படி தீர்த்து வைக்க முடியும் என்று ஆராய்ந்து அவர்களுக்கு நன்மை செய்யவேண்டு மென்ற ஒரே நோக்கத்துடன் தான் செய்யப்பட்டது. அதை அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நான் நம்புகிறேன். அவ்வாறு செய்ய நான் அவர்களையும் கேட்டுக்கொள்கிறேன். அடுத்து வருகிற வருஷத்திலும் இந்த வருஷத்தில் உள்ள நிலைமை போல் ஒரு நல்ல சீரான நிலைமை இருக்காது என்று நான் அஞ்சுகிறேன். ஏற்கெனவே, பல மில்களி லிருந்து தங்களுக்கு நூல் தேக்கம் அதிகரித்து விட்டது, அதனுல் அதிக மான உற்பத்தி செய்ய முடியவில்லை, வேலை நேரத்தைக் குறைக்க வேண்டும் அல்லது ஷிப்டுகளை மூடவேண்டுமென்றெல்லாம் சர்க்காரிடம் வந்து தெரிவித்திருக்கிறார்கள். சிலர் சட்ட விதிகளுக்கு மாறுககூட தாங்களாகவே ஒன்றிரண்டு இடங்களை மூடியும் விட்டார்கள். இந்த அறிக்கை இன்றைக்கு வெளி வந்தாலும் அது சில நாட்களுக்கு முன்ன தாகவே அனுப்பப்பட்டது. அந்த அறிக்கையை அனுப்பியதின் காரணம் சட்டத்தை நன்கு எல்லோரும் உணர்ந்து கொள்ளவேண்டும் என்பதற்காக. எந்த தொழிலை மூடுவதாகயிருந்தாலும் அதற்கு 21 நாள் நோட்டீஸ் கொடுக்கவேண்டும் என்ற நிலைமையை எல்லாம் அந்த அறிக்கையின் மூலம் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இந்த அறிக்கை மூலமாக மில்கள் மூடுவதை தவிர்க்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. ஆனல் அந்த அறிக்கைமூலம் அவர்கள் அவகாசம் கொடுப்பார்களேயானுல் அதை யொட்டி தொழிலாளர்களையும் முதலாளிகளையும் அழைத்து அதில் உண்மை நிலை என்னவென்று ஆராய்ந்து அவர்களுக்கும் ஒரு சமரசமான முடிவிற்கு வரும்படிசெய்ய முடியும் என்ற நோக்கத்துடன்தான் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது. உண்மையாகவே நூல் தொழிலில் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது என்ற நிலைமை இருக்குமானுல், அதன் உண்மையை தொழிலாளர் தலைவர்கள் உணர்ந்து எப்படி ஒத்து ழைத்தால் தொழிலை மூடிவிடாத நிலைமையில் ஓரளவு குறைபாடுகள் செய்துகொண்டால்தான் தொழில் நீடித்து நடக்கும் என்று நிலையில் அவைகளைச் செய்வதற்கான முயற்சிகளையும், ஒத்துழைப்பையும் கொடுப்பார் கள் என்பதில் எனக்குச் சற்றும் சந்தேகமில்லை.

அவ்வாறு இன்றைக்கு பிற சலுகைகளை கொடுக்கவேண்டும் என்று சொல்லும்பொழுது அவர்கள் மில்களை மூடுகிறோம் என்றுள்ள முடிவுக்கு வந்து விடுகிறார்கள். இம்மாதிரி சந்தர்ப்பங்கள் வருகின்ற நேரத்தில் அதை பரிசீலித்து அதன்பேரில் நடவடிகை எடுக்க சர்க்கார் தயங்காது என்பதை தெரிவித்துக்கொள்ளவிரும்புகிறேன். இந்த நிலைமையில் இன்னும் ஒரு மாதங்களில் வரக்கூடிய நிலைமை அச்சத்தை உண்டாக்கக் கூடிய நிலைமையில் இருக்கிறது. எக்ஸைஸ் ரிபேட் என்று கொடுத்த சலுகையை பொறுத்த அளவில் சென்னை ராஜ்யத்தில் இருக்கக்கூடிய நூற்பு ஆலைகளுக்கு இந்தச் சலுகை கிடைக்கவில்லை. நூற்பு ஆலையும், நெசவு ஆலையும் சேர்ந்திருக்கின்ற ஆலைகளுக்குத்தான் இந்த சலுகை பயன்படும். நூற்பு ஆலைகளை மாத்திரம் வைத்திருக்கின்றவர்களுக்கு சர்க்கார் கொடுத்திருக்கின்ற இந்த எக்ஸைஸ் வரி குறைப்பானது பயன் படாது. இந்த நிலைமை ஏற்படுகின்ற பொழுது அவர்கள் எந்த அளவுக்கு நூல் விலையை குறைப்பதற்கும் அதேசமயத்தில் கைத்தறி துணிகளை

25th March 1958] [Sri R. Venkataraman]

விற்பதற்கும் ஒரு முடிவுகட்ட வேண்டும். அதற்கு மில் முதலாளிகளும் எல்லா தொழிற் சங்க தலைவர்களும் தங்களுடைய ஒத்துழைப்பை கொடுப்பார்கள் என்று நம்புகிறேன். எல்லோரும் இதில் ஒன்றுபட்டு உறுதியாக இருந்தால் கட்டாயமாக இந்த பிரச்சினையை தீர்க்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. ஆகவே அந்த அடிப்படையில் முயற்சி எடுத்துக்கொள்வோம் என்று சொல்லி, அதற்காக உங்கள் எல்லோருடைய ஒத்துழைப்பையும் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இறுதியாக இந்த மான்யத்தின்மீது பேசும்பொழுது என்னைப் பற்றியும் என்னுடைய இலாகாவைப் பற்றியும் பாராட்டி பேசிய நண்பர்கள் அனைவருக்கும் என் இலாகாவின் சார்பாகவும் என் சார்பாகவும் என் நன்றியறிதலை தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri N. K. PALANISAMI :** ஸார், பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் : தொழிலாளர்களுக்கு வீடு கட்டி கொடுக்கும் விஷயத்தில் தொழிலாளர்கள் அதற்கு 25 சத வீதம் கொடுத்தால் போதும் என்றிருந்தது. இப்பொழுது தொழிலாளர்களால் இந்தத் தொகையை கொடுக்க முடியாமல் இருக்கிறது. இதனால் 10 சத வீதம் கொடுத்தால் போதும் என்று ஏதாவது முடிவு செய்யப்பட்டிருக்கிறதா ? மேலும் இதற்காக ஒதுக்கப்படும் தொகையும் செலவு செய்யப்பட்டதாக தெரியவில்லை. இதைப் பற்றி என்ன முடிவு செய்யப்பட்டிருக்கிறது. தொழிலாளர்கள் 10 சத விதம் கொடுத்தால் போதுமா ? என்பதை அறியவேண்டுகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN :** தொழிலாளர்கள் வீடு கட்டுகின்ற திட்டத்தில் 25 சத விதம் கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது. அவ்வாறு 25 சத வீதம் கொடுக்க முடியாது என்று 1957-ல் நடந்த 15-வது இந்தியத் தொழிலாளர்கள் மகாநாட்டில் சென்னை ராஜ்யத்தின் சார்பாக நான் எடுத்துக்கூறினேன். அதன் பின்பு நடந்த தொழிலாளர் இலாகா மந்திரிகள் மகாநாட்டிலும் இதைப்பற்றி வற்புறுத்தினேன். இதில் மாறுதல் செய்வதற்கில்லை என்று மத்திய சர்க்கார் சொல்லி விட்டார்கள். இதை 10 சத வீதம் என்று குறைக்கவேண்டும் என்பதை எடுத்து மத்திய அரசாங்கத்திற்கு சொன்னபோது அங்குள்ள நிதி இலாகா ஏற்றுக் கொள்ள முடியாது என்று தெரிவித்துவிட்டது. அதனால் தொழிலாளர்கள் 25 சத வீதம் கட்டினால்தான் வீடு கட்ட முடியும் என்ற நிலைமை இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

Sri M. R. KANDASAMY MUDALIAR rose—

DEPUTY SPEAKER : This is not question hour.

Sri V. K. KOTHANDARAMAN rose—

DEPUTY SPEAKER : This is not question hour. There can be no discussion now. The hon. Member may please resume his seat. Is hon. Member Sri Pakkirisami Pillai withdrawing his cut motion?

Sri S. PAKKIRISAMI PILLAI : I am not withdrawing my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

"That the allotment of Rs. 34,01,900 under Demand XXIII —Labour including Factories be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

[25th March 1958

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 34,01,900 under Demand XXIII—Labour including Factories."

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now rise for lunch and meet again at 3-30 p.m.

The House then adjourned.

**(After lunch—3-30 p.m.)**

VI.—GOVERNMENT BILLS.

(1) THE INDIAN STAMP (MADRAS AMENDMENT) BILL, 1958[a] (L.A. BILL NO. 12 OF 1958).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, I beg to move—

"That the Indian Stamp (Madras Amendment) Bill, 1958 (L.A. Bill No. 12 of 1958) be taken into consideration."

Sir, I may as well explain a few general features underlying this Bill. The Bill seeks to amend the Indian Stamp Act, 1899 in its appplication to the State of Madras. The main purpose of the Bill is to express wherever necessary in terms of decimal system of coinage the rates of stamp duty at present in force in this State. The Indian Stamp Act contains a Schedule—Schedule I laying down the rates of stamp duty originally fixed by the Government of India. The State Government have power, however, to vary the rates in respect of documents other than those specified in entry 91 of list I in the Seventh Schedule to the Constitution. The result is that there are two Schedules to the Stamp Act, Schedule I specifying the rates of stamp duty as originally fixed by the Government of India and Schedule I-A which specify the rates of stamp duty payable in Madras State on the various documents. The Bill seeks to omit Schedule I-A altogether and to amend Schedule I suitably carrying out consequential alterations in the body of the Act.

The Government of India have in consultation with all State Governments decided what should be the equivalents in terms of decimal coinage in respect of each rate and have asked all State Governments for the sake of uniformity to adopt these rates. It will be seen that the new rates proposed by the Government of India are in many cases higher than the exact decimal equivalent vide the table given in paragraph 2 of the Statement of Objects and Reasons to the Bill. It is not the purpose of the Bill to increase the existing rates as found in Schedule I-A but merely to adopt the rates fixed by the Government of India. For example, by comparing the rates for a particular article in Schedule I with the rates as now proposed to be specified in this Bill, it may seem on the face

[a] Published in the *Fort St. George Czette* Gazette Extraordinary, dated 14th March 1958